# இக் கைகள் எவ்வளவு திறம்பட வேலைகள் செய்கின்றன, ஆனால்...

## ... திறனுள்ள கைகள் கூட அழுக்கடைகின்றன !

அழுக்கடைந்த கைகள்

**மறைந்திருக்கும் அபாயத்தைத் தாங்குகின்றன !**

அழுக்கில் கண்களுக்கு
புலப்படாத கிருமிகள் இருப்பதால்!




லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது!

L. 176-50 TM












SOAPS

# சிறப்பாகவும்
# சிரமமின்றியும்
# சிக்கனமாகவும்
# சலவை செய்கின்றன




பார்களாகவும் மிக நேர்த்தியான
கேக்குகளாகவும் கிடைக்கும்.







ஸ்வஸ்திக்கின் தொடர்ந்து வேலை செய்யும் சோப் இயந்திரத்தில் தயாரிக்கப்படுகிறது. இவ்வகை இயந்திரம் ஆசியாவிலேயே இது ஒன்றுதான்.






விற்பனை டெப்போக்கள் :

| | | |
|---|---|---|
| பெங்களூர் ஸிடி<br>ஆர்காடு ஸ்ரீநிவாஸாசார் ரோடு<br>கொச்சி<br>கல்வத்தி ரோடு | மதராஸ்<br>14, லிங்கி தெரு, ப்ராட்வே<br>விசாகப்பட்டணம்<br>20-125, தாம்ஸன் தெரு | தவணகெரே : மண்டிப்பேட்டை<br>ஹைதராபாத் (Dn.)<br>B-2, பிளாக் 4, ஷா ரோடு<br>உஸ்மானி, கந்தான் பஜார் |

# கிராம அமைப்பு

## சுலபமாக்கப்பட்டது

"நமது நாளைய கிராமங்கள்" இந்த புது புத்தகம் கிராம முன்னேற்றத்திற்காக பாடுபடும் முனிஸிபாலிடிகள், ஜில்லா லோகல் போர்டுகள், கிராம பஞ்சாயத்துகள், நில சுவான்தார்கள், குடியானவர்கள் முதலிய யாவருக்கும் சகாயத்தை அளிக்கும் நோக்கத்துடன் தயாரிக்கப்பட்டது.

அநேக வர்ணப் படங்களுடன் கூடிய இந்த 64 பக்கங்கள் கொண்ட புத்தகத்தின் விலை ரூ. 2/8- (தபால் செலவு 7 அணா தனி) இன்றே உங்கள் பிரதிக்கு கூப்பனுடன் விண்ணப்பம் செய்யுங்கள்.

இந்த புஸ்தகத்தில் பிற்கால இந்திய கிராமத்தின் அமைப்பு 21"X10" சைஸ் வர்ணப்படம் மூலம் வரையப்பட்டிருக்கிறது.




ஸ்ரீ

**அஸோஸியேடட் ஸிமெண்டு கம்பெனீஸ் லிமிடெட்**

இவர்களின் வியாபார மானேஜர்கள்

**ஸ்ரீ ஸிமெண்டு மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிட்.**

கூப்பன்:

ஸ்ரீ கான்க்ரீட் அஸோஸியேஷன் ஆப் இந்தியா
9, மவுண்ட் ரோட், மதராஸ்.

"நமது நாளைய கிராமங்கள்" பிரதி ஒன்று உடனே எனக்கு அனுப்பி வையுங்கள். கிரயத்திற்கும் தபால் செலவிற்குமாக ரூ. 2/15/- மணியார்டர்/போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பியிருக்கிறேன்.

பெயர்.........................................

விலாசம்.........................................

(செக்குகள் ஏற்கப்பட மாட்டா) KM:39

## ஸ்ரீ தியாகப்பிரம்ம பக்த ஜன சபா, மதராஸ்

இசையரசு — சங்கீத சாஹித்ய சிரோன்மணி
திரு எம். எம். தண்டபாணி தேசிகர்
அவர்கள் தலைமையில் சிறந்த சங்கீதக் கச்சேரி!



இசைச்செல்வர்
சீ. எஸ். செல்வரத்தினம் பிள்ளை & விருதுநகர் என். காசிராஜன் } பாட்டு
டி. பாலசுப்பராயலு — பிடில்
தஞ்சை கிருஷ்ணமூர்த்தி ராவ் — மிருதங்கம்

சனி 11-8-51 மாலை 5-30 மணிக்கு
கோகலே ஹாலில் நடைபெறும்




விலை 1-8-0

## திராவிடப்பண்ணை

தெப்பக்குளம் - திருச்சி

# அஜீர்ணமா?

உட்கொள்ளுங்கள்

## ஒரு டோஸ்

இம்மருந்தில்




மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் ஒரே டோஸ் சாப்பிட்டவுடனேயே அஜீரணத்தாலேற்படும் உப்பசம், இருதய எரிச்சல், குமட்டல், வயிற்று நோவுகள் மறைந்துவிடும். இன்றே நீங்கள் பரிக்ஷித்துப் பாருங்கள். "அலெக்ஸ் ஸி. மக்ளீன்" என்ற கையெழுத்துடன் கூடிய அசல் மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடரையே பார்த்து வாங்குங்கள்.

வியாபார விவரங்களுக்கு: ஜே.எல்.மாரிசன்,ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட், மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.

---

"வாங்க மிகச் சிறந்தவை

Platignum"

MADE IN ENGLAND

பிளாட்டினாம்

பேனாக்கள் பால்பாயின்டுகள்

LAS. (B)

உதயத்துடன்
உங்களுக்கு
உற்சாகம்
உதீக்க
உதவுவது





# கவுடர் காபி

## மனங்கவரும் மணம்
## சிறந்த ருசி
## பரிசுத்தமான பக்குவம்
## உயர்ந்த ரகம்

நினமும் கவுடர் காபி அருந்திய பிறகுதான் இதர வேலையை ஆரம்பியுங்கள். அதன் உயர்ந்த மணமும், சுவையும் உங்களுக்கு நிச்சயம் நாள் முழுதும் உற்சாகம் தரும்.

நினைவிருக்கட்டும் "கவுடர்" என்றால்

சிறந்த பிளான்டேஷன் ரகம்.
காகிதப் பைகளில் கிடைக்கும்.

## என். தாசாய் கவுண்டர் அன் கோ
41. பந்தர் தெரு..............மதராஸ். 1



EP

விவசாயிகளின் இணையற்ற மதிப்பைப் பெற்றுள்ளதும்
குறைந்த விலையில் நீடித்த உழைப்பை
அளிக்கக் கூடியதுமான

**"யான்மர்"**

6 H. P.



என்ஜின்கள் எங்களிடம் சரஸமான விலைக்குக் கிடைக்கும்

முழு விவரங்களுக்கு:

**ஸாம்ஸன் & கம்பெனி, லிமிடெட்,**

151, பிராட்வே - த. பெ. நெ. 1219 - மதராஸ் - 1

போன்: 4521 தந்தி: "BARAPASH"

---

பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிட்.

**மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்**

**5,00,000 நூற்கும் கதிர்கள் நம்பர் 80 வரை நூல்கள்**

**எங்களுடைய விசேஷமான நூல்கள்:** ஒத்தை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

**நாங்கள் சப்ளை செய்வது:** கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காரிக்கன் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள் கனத்த வெப்பிங், கான்வாஸ் முதலியவைகளுக்கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள். எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப்போல் எல்லா வகையிலும் கீர்த்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை.

மானேஜர்கள்: **ஏ. & எப். ஹார்வி லிமிடெட்**

# பொருள் அடக்கம்

கல்கி

மலர் 11 | இதழ் 2 — 1951 ஆகஸ்டு 12 — கர ௵ ஆடி 27உ

கல்கி

மலர் 11 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 2

# முடிந்து விட்டது!

ஓமந்தூர் - காமராஜ் கடிதப் போக்குவரவு முடிந்து விட்டது. இது ஒரு மிக மிக ஆச்சரியமான விஷயம். இந்த 1951-ம் வருஷம் டிசம்பர் மாதத்தில் தான் அவர்களுடைய கடிதப் போக்குவரவு முடியும் என்று எதிர்பார்த்தோம். ஆனால் நாலு மாதத்துக்கு முன்னாலேயே முடிந்து விட்டது. தபால் இலாகா சிப்பந்திகள் உள்படச் சம்பந்தப்பட்ட அனைவரையும் பாராட்ட வேண்டியதுதான்.

"காங்கிரஸைத் தூய்மைப்படுத்த வேண்டும்; அரசாங்க நிர்வாகத்தைச் சீர்திருத்த வேண்டும்; கிராம மக்களுக்கு உகந்த நன்மைகளைச் செய்ய வேண்டும்" என்றெல்லாம் ஸ்ரீ ரெட்டியார் செய்ய வேண்டிய பத்து விஷயங்களைக் குறிப்பிட்டு எழுதினார். "எல்லாம் பண்ணி விட்டால் போகிறது; தாங்கள் சென்னைக்கு வந்தால் கலந்து யோசித்துப் பண்ண வேண்டியதைப் பண்ணலாம்" என்று ஸ்ரீ காமராஜ் பதில் எழுதினார்.

"நான் சென்னைக்கு வர முடியாது; ஆகையினாலே பண்ண வேண்டியதைத் தாங்களே பண்ணி விடுங்கள்!" என்று ஓமந்தூரார் மறுபடி எழுதினார்.

அத்துடன், கடிதப் போக்குவரவு முடிந்தது. ஓம் தத்ஸத்!

* * * *

இன்றைக்கு ஒரு வருஷத்துக்கு முன்னாலிருந்து காங்கிரஸ் ஸ்தாபனத் தேர்தல்களில் நடந்த ஊழல்களைப் பற்றிச் செய்திகள் வெளியாகி வந்தன. மேற்படி தேர்தல்கள் நடந்த காலத்திலும் உடனடியாகவும் ஓமந்தூர் ரெட்டியார் அவர்கள் சிறிது ஊக்கம் எடுத்து முயற்சி செய்திருந்தால் பல ஊழல்களை நிவர்த்தி செய்திருக்கலாம். ஓமந்தூரார் அப்போதெல்லாம் சும்மா இருந்து விட்டார் என்பதை வருத்தத்துடன் குறிப்பிட வேண்டியிருக்கிறது.

இந்த வருஷ ஆரம்பத்தில், மாகாண கமிட்டித் தலைவர் தேர்தலுக்குப் பிற்பாடு ஏற்பட்டிருந்த நிலைமையில், ஓமந்தூர் ரெட்டியார் காங்கிரஸ் தூய்மையில் பற்றுக் கொண்ட தமது சகாக்களுடன் கலந்து ஆலோசித்துத் தீவிர நடவடிக்கை எடுத்திருந்தால், நல்ல பலன் கிட்டியிருக்கும். அப்போதும் அவர் ஒன்றும் செய்யவில்லை. ஸ்ரீ காமராஜுக்கு அவ்வப்போது அந்தரங்கக் கடிதம் எழுதுவதுடன் திருப்தி அடைந்து இருந்து விட்டார். ஒருவேளை தம்முடன் ஒத்துழைக்கக் கூடிய சகாக்கள் யாருமே இல்லை என்ற நிராசை அடைந்தும் அவர் சும்மா இருந்திருக்கலாம். இது உண்மைக் காரணமானால், பொது ஊழியம் செய்வதற்குரிய மனப்பான்மையைக் காட்டவில்லை.

எனினும், அப்போது நாட்டில் நடந்த கிளர்ச்சியினால் காங்கிரஸ் ஸ்தாபன ஊழல்கள் ஓரளவு நிவர்த்தியாயின. காங்கிரஸ் காரியக் கமிட்டியும் பாபு புருஷோத்தமதாஸ் டாண்டனும் சரியான ருசுக்களுடன் எடுத்துக் காட்டப்பட்ட ஊழல்களில் தலையிட்டு நியாயம் செய்திருக்கிறார்கள்.

காங்கிரஸ் ஸ்தாபனத்துக்குப் புதிய அமைப்பும் ஏற்பட்டுப் புதிய முறையில் தேர்தல்கள் நடக்கப் போகின்றன. இந்த நிலைமையில் இனிமேல் நடக்க வேண்டியதைக் கவனிக்க வேண்டுமே தவிர, நடந்து போனதைப் பற்றியே சொல்லிக் கொண்டிருப்பதில் யாதொரு பயனும் இல்லை.

* * * *

அரசாங்க நிர்வாகம் சம்பந்தமாக ஓமந்தூர் ரெட்டியார் எடுத்துக் காட்டியிருக்கும் குறைகள் பலவற்றை நாமும் குறிப்பிட்டுக் கண்டித்து வந்தி

ருக்கிறோம். அவற்றுக்கெல்லாம் பயனே ஏற்படவில்லையென்று சொல்ல முடியாது. ஓரளவு பயன் ஏற்பட்டுத்தானிருக்கிறது. நம் அரசாங்கம் ஜனநாயக அரசாங்கம்; மக்களின் ஆதரவையே நம்பி நடைபெறுவது. ஆகையால் பொதுஜன அபிப்பிராயம் பலமாக இருந்தால், அதை மீறி அரசாங்கம் வெகு காலம் ஒன்றும் செய்துவிட முடியாது. யார் ஆட்சி செலுத்தினாலும் சில குறைபாடுகள் இருந்து கொண்டுதானிருக்கும். ஓமந்தூர் ரெட்டியார் முதன் மந்திரியாயிருந்த காலத்திலும் குறைகள் இருந்தன. அவற்றை நிவர்த்திக்கப் பாடுபடுவது பொதுஜன ஊழியர்களின் கடமை. ஆனால் எப்போது குறைபாடுகளைப் பற்றிச் சொல்வது, எப்போது விளைந்துள்ள நன்மைகளைப் பற்றிச் சொல்வது என்பதை நிதானித்துப் பார்ப்பதும் தேச பக்தர்களுடைய கடமை.




முனிவரின் கோபம் !

குறைகள் சொல்வது, புகார்கள் எழுப்புவது முதலிய முயற்சிகளை மட்டுப் படுத்திக்கொண்டு மேலே நடக்க வேண்டியதைக் கவனிக்கும் காலம் இப்போது வந்திருக்கிறது. பொதுத் தேர்தல் நெருங்குகிறது. காங்கிரஸைக் காட்டிலும் மக்களின் நன்மையைத் தேடக்கூடிய ஸ்தாபனம் ஒன்று இருக்கிறது என்று ஏற்பட்டால், தேர்தலில் அந்த ஸ்தாபனத்தை ஆதரிப்பதே உண்மையாளர்களுக்கு அழகு. அந்தகைய ஸ்தாபனம் ஒன்றும் இப்போது தேசத்தில் இல்லை. காங்கிரஸ் கோளாறுகளுக்குக் காரணமாயிருந்தவர்கள் பலர் இப்போது காங்கிரஸை விட்டு வெளியேறி வேறு ஸ்தாபனங்களை ஆரம்பித்திருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களைத் தேசபக்தர்கள் ஆதரிக்க முடியுமா !

பொதுத் தேர்தல் முடியும் வரையில் ஸ்தாபன - நிர்வாக சம்பந்தமான விவாதங்களை நிறுத்தி வைத்துவிட்டு, தேர்தலில் காங்கிரஸ் வெற்றி பெறுவதற்காகப் பாடுபடுவதே தற்சமயம் காங்கிரஸ்வாதிகளின் கடமையாகும்.

ஓமந்தூர் ரெட்டியார் மாகாணத் தேர்தல் கமிட்டியிலிருந்து விலகிக்கொண்டது சரியென்று நாம் கருதவில்லை. கமிட்டியில் அவர் இருந்திருந்தால் தகுதி வாய்ந்த நல்ல அபேட்சகர்களைப் பொறுக்கி எடுப்பதில் அவருடைய யோசனையும் உதவியும் உபயோகமாயிருந்திருக்கும். அந்தச் சந்தர்ப்பத்தை ஓமந்தூரார் புறக்கணித்தது வருந்தத் தக்கது.

காங்கிரஸிலிருந்து ஓமந்தூர் ரெட்டியார் விலகிக் கொள்ளவில்லையென்பதும், வேறு கட்சியில் அவர் சேரவில்லையென்பதும் திருப்திகரமானவை. காங்கிரஸில் ஆரம்ப அங்கத்தினராகத் தொடர்ந்து இருந்து வர ரெட்டியார் நிர்மானித்திருப்பது மகிழ்ச்சிக்குரியது. அவரிடம் உள்ள தூய்மை ஓரளவு அவர் அங்கத்தினராயிருக்கும் காங்கிரஸ் ஸ்தாபனத்திலும் பிரதிபலித்தே தீருமல்லவா !

பொதுத் தேர்தலில் காங்கிரஸ் வெற்றி அடைவதற்கு ஓமந்தூர் ரெட்டியார் தமது பூரண ஒத்துழைப்பை அளிப்பார் என்று நம்புகிறோம். காங்கிரஸ் வாதிகள் அனைவரும் இனி ஒரே குரலுடன் பேசிக் காங்கிரஸின் வெற்றிக்குப் பாடுபடுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# கடவுளே! எங்கள் சங்கீதம்!

நமது இளம் நேயர்களில் சிலர் நமக்கு மிகக் காரசாரமாக எழுதியிருக்கிறார்கள். சக்கைப் போடு போட்டு வெளுத்து வாங்கியிருக்கிறார்கள். எல்லாம் 'வாதாபி' சங்கீதத்தை நாம் தாக்கி எழுதியதற்காகத்தான் !

ஸ்ரீ எம். ராஜாராம் (மெயின் ஹாஸ்டல், அமெரிக்கன் காலேஜ், தல்லாகுளம், மதுரை) எழுதியிருக்கிறார் :—

"இன்று இந்நாட்டில் ரேடியோ வைத்திருப்பவர்களில் 70 சத விகிதத்தினர் கர்நாடக சங்கீதம் கேட்பதற்காக ரேடியோ வாங்கவில்லை. ஓய்வு நேரங்களிலே நல்ல சினிமாப் பாட்டுக்களையும், ஹிந்தி சினிமா கீதங்களையும், சுவை மிக்க நாடகங்களையும் கேட்பதற்காகத்தான். உண்மை நிலை இது. அது கண்டு ஆத்திரப் படுவதில் அர்த்தமேயில்லை......சங்கீதம் என்பது யாது? சாதாரண மக்களையும் தன்பால் ஈர்க்கக் கூடிய சக்தி வாய்ந்ததே உண்மையான சங்கீதமாகும்....தங்கள் யோசனையைத் நிலையகர் பின்பற்றினால் அதன் விளைவாக இந்தியாவில் 70 சத விகிதத்தினர் இந்திய நிலையங்களை வைத்துக் கேட்க மாட்டார்கள். அவர்கள் விரும்பிய வண்ணம் பணியாற்றிக் கொண்டிருக்கும் 'ரேடியோ சிலோன்' 'ரேடியோ கோவா' ஆகிய நிலையங்களை

வைத்துக் கேட்டுக் கொள்வார்கள். தங்களைப் போன்ற ஒரு சிலர் மட்டும் இந்திய வானொலி நிலையங்களில் 'பாரதீய சங்கீதம்' கேட்டு ரஸித்துக் கொண்டிருக்கலாம்!...''

ஸ்ரீ ம. ந. ராமசாமி (பவர் ஹவுஸ், சிங்காரா, நீலகிரி) எழுதியுள்ளார்:—

''ஜூலை 22-ந் தேதி இதழில் கர்நாடக சங்கீத ரஸிகர்கள் என்னும் பிற்போக்குக் கும்பலுக்கு வக்காலத்து வாங்கித் தலையங்கம் எழுதியிருக்கிறீர்கள். நாலு வருடங்களுக்கு முன் 'ரத்தன்' என்னும் படம் சென்னையில் மட்டும் 25 வாரங்கள் ஓடியதே, அது ஞாபகம் இருக்கிறதா! சரியான விளம்பரம் அளிக்கப்படாத அப்படம் அவ்வளவு காலம் ஓடக் காரணம் என்ன! கதை சுமாரானது. டைரக்ஷன், ஸீனேரியா, படப்பிடிப்புக் கோணங்கள் முதலியவற்றைப் பற்றி நம் ஜனங்களுக்கு அவ்வளவாகத் தெரியாது. திறமையான நடிகர்கள் நடித்த எவ்வளவோ படங்கள் மண்ணைக் கவ்வியிருக்கின்றன. இதனால் ரத்தன் படத்தின் வெற்றிக்கு அதன் பாட்டுக்களே காரணம் என்பதைத் தாங்கள் அறிய வேண்டுகிறேன்....'மங்கேஷ் கீதம்' என்று கிண்டலாக எழுதியிருக்கிறீர்களே! தாங்கள் என்றாவது அவ்வம்மையாரின் இசைத் தட்டுக்களைக் காது கொடுத்துக் கேட்டதுண்டா! 'படைபஹன்' என்ற படத்தில் 'கப் கப் கீடே' என்ற பாடலை லதா பாடியிருக்கிறார். என் நான்கு வயதுத் தம்பி இப்பாடலைக் கேட்கப் பாதிசாப்பாட்டில் ரேடியோ அருகில் ஓடி விடுவான். தற்சமயம் வெளிவரும் ஹிந்திப் படங்களின் பாடல்களைக் குழந்தைகளே வெகு ஆவலோடு ரஸிக்கின்றனர்; கேட்டுக் கேட்டுக் கூத்தாடுகின்றனர். இப்படிப்பட்ட ஒரு சங்கீதத்தை நந்த வம்சத்தைச் சாணக்கியன் ஒழித்துக் கட்ட விரும்பியதைப் போல் தாங்களும் விரும்புகிறீர்கள். சங்கீதம், சங்கீதம் என்கிறீர்களே, எது சங்கீதம்! எருமைக் குரலில் சப்த ஸ்வரங்களில் 'ஸ'வுக்கும் 'க'வுக்கும் வித்தியாசமில்லாது உறுமும் சங்கீத வித்வானின் கூச்சலைச் சங்கீதம் என்கிறீர்களா! நாளை தங்கள் மடியில் தவழும் பேரனோ பேத்தியோ தன் மழலை வாயால் 'கப் கப் கீடேஹோகா' என்றோ 'லாரலப்பா' என்றோ பாடத் தொடங்கினால், தயவு செய்து தங்களுடைய கோபத்தை அடக்க முடிந்தால், அக் குழந்தையிடம் 'ஸரஸீருஹா ஸனப் பிரியே' என்றோ, 'நடசி நடசி' என்றோ பாடி, கர்நாடக சங்கீதத்தின் உயர்வைக் குழந்தைக்கு அறிவுறுத்தப் பாருங்கள்......!''

இதே தோரணையில் இன்னும் போடு போடு என்று போட்டிருக்கிறார் மேற்படி நண்பர். செங்கற்பட்டிலிருந்து ஸ்ரீ பி. வெங்கடேஷ் (பி. ஏ. ஆனர்ஸ் மாணவர்) எழுதியிருப்பதையும் கேளுங்கள் :—

''பாமர மக்கள் கர்நாடக சங்கீதத்தை அநுபவிப்பது மிகவும் கஷ்டம். அவர்கள் சங்கீதத்தில் எதிர் பார்ப்பது இனிமைதான்... அந்த இனிமை ஹிந்திப் பாட்டுக்களில் அதிகமாக இருக்கிறது. 'லாரலப்பா' உங்களுக்கு அலறல் சத்தமாக இருக்கலாம். ஆனால் அதே பாட்டு அநேகருக்கு ஆனந்தத்தை அளிக்கிறது. கல்யாணி ராகத்தை வித்வான் ஒருவர் எவ்வளவு அலசி அலசிப் பாடினாலும் அதைக் கேட்கும் பிரமுகர்கள் கொஞ்சம். அதே சமயத்தில் மற்றொரு நிலையத்தில் 'பர்ஸாத்' பாட்டுகள் ஒலி பரப்பப்பட்டால் அதைக் கேட்டு மகிழும் அன்பர்கள் அநேகம்......வானொலி நிலையங்களிலுள்ள அவ்வளவு ஸினிமாப் பாட்டுக்களையும் உடைத்தெறிந்துவிட வேண்டும் என்று எழுதியிருப்பது அதிசயத்தையும் ஆத்திரத்தையும் மூட்டுகின்றது. உங்களுக்கு ஸினிமாப் பாட்டுக்கள் பிடிக்கவில்லையென்றால் அவை ஒலி பரப்பப் படும்போது ரேடியோவை மூடிவிடும். பக்கத்து வீட்டில் ஸினிமாப் பாட்டு, உரக்கப் பாடிக் கொண்டிருந்தால் காதில் பஞ்சு அடைத்துக் கொள்ளும். ஹிந்திப் பாட்டுக்களை 'டப்பா' பாட்டுக்கள் என்று சிறிதும் கூச்சமில்லாமல் எழுதியிருக்கிறீர்கள். நானும் ஒரு பத்திரிகை நடத்தி அதில் கர்நாடக சங்கீதத்தைத் 'தரகுகா' என்றால் நீர் சும்மா இருப்பீரா... !''

இம்மாதிரி இன்னும் பல கடிதங்கள். பெரும்பாலும் இளம் பிராயத்து நண்பர்கள் எழுதியவை. ஹிந்தி ஸினிமா மெட்டுக்களை நாம் தாக்கியது அவர்களுடைய எழுதும் ஆற்றலையே வெளிக் கொண்டு வந்திருப்பது போல் தோன்றுகிறது. அவ்வளவு ஆவேசத்துடனே எழுதி யிருக்கிறார்கள்.

ஹிந்தி ஸினிமா மெட்டுக்களினால் கர்நாடக சங்கீதத்துக்கு அபாயம் என்று நாம் எழுதியது ஒருவேளை மிகையாயிருக்குமோ என்ற சந்தேகம் சிறிது நமக்கு இருந்தது. அதுவும் இப்போது தீர்ந்து விட்டது. இப்போது போகிற போக்கில் போய்க் கொண்டிருந்தால், அடுத்த தலைமுறையில் கர்நாடக சங்கீதத்தைக் கேட்கவே யாரும் இருக்க மாட்டார்கள் என்று நாம் இப்போது திட்டமாகச் சொல்லக் கூடும்.




சுற்றுப் பிரயாணம்!




கோமாளிக் கூத்து!

நம்முடைய கட்சியை ஆதரித்து எழுதியுள்ள சில 'கர்நாடக'ப் பேர்வழிகளும் இல்லாமற் போகவில்லை. ஜெம்ஷெட்பூரிலிருந்து ஸ்ரீ டி. எஸ். பானு எழுதுகிறார் :—

"The 'Dappa' music which you have mentioned comes mainly from the Radio Ceylon. This station has about one dozen gramaphone plates. This 'Dappa' plate and its sisters are played over and over again with the result that at any time of the day or night you tune your Radio and hear only the 'Dappa'. The only remedy to stop this is for our Government to jam the station. None who is sane and has taste will tune to such music, but unfortunately in a house where there are children only such programmes will come out....... This dirty and unwholesome music does more harm than good to the children. If anything is done so that this music is not heard in India every parent will be grateful to the authorities."

இந்த நண்பருக்கு ஸினிமா சங்கீதத்தின் பேரில் அவ்வளவு வெறுப்பு இருக்கிறது. டப்பா சங்கீத இசைத் தட்டுக்கள் அடிக்கடி வைக்கப்படும் ஸிலோன் ரேடியோவை இந்தியாவில் கேட்க முடியாமல் செய்துவிட வேண்டும் என்று சொல்கிறார். ஆனால் இவரும் ஒரு விஷயத்தை ஒப்புக் கொள்கிறார். வீட்டில் குழந்தைகளின் இளம் உள்ளத்தை அந்த ஸினிமா 'டப்பா' சங்கீதம் கவர்ந்து விடுகிறது என்று. ஆகவே, கர்நாடக சங்கீதத்தின் வருங்கால கதியைப் பற்றி நம்முடைய பயம் மேலும் உறுதிப் படுகின்றது!

* * *

கிரேக்க நாடு ஒருகாலத்தில் உலகில் இணையற்ற மகோன்னத பதவியை வகித்திருந்தது. கிரேக்க சாம்ராஜ்யம் எங்கெங்கும் பரவியிருந்தது. பிறகு அந்த சாம்ராஜ்யத்துக்கு அபாயம் வந்தது. நாலா பக்கமும் எதிரிகள் சூழ்ந்தார்கள். தோல்விக்கு மேல் தோல்வி ஏற்பட்டது. சாம்ராஜ்யம் சின்னா பின்னமாகி விடும் என்று தோன்றியது அப்போது கிரேக்க நாட்டு மகான் ஒருவர் இருந்தார். அவர் கடவுளிடம் பிரார்த்தனை செய்தார் :—

"எங்கள் சாம்ராஜ்யம் போகட்டும்; எங்கள் ஐசுவரியம் போகட்டும்; எங்கள் மாடமாளிகை வண்டி வாகனங்கள் போகட்டும்; எங்கள் வர்த்தகம், கைத்தொழில், கப்பற்படைச் செல்வம் எல்லாம் போகட்டும். ஆனால், ஆண்டவனே! எங்கள் நாட்டின் புராதனமான கலைகளை,—கவிதை, காவியம், சிற்பம், சங்கீதம் ஆகிய இணையில்லாச் செல்வங்களை,—அழியாத படி காப்பாற்றிக் கொடுப்பாயாக!"

இவ்விதம் அந்த கிரேக்க ஞானி வேண்டிக் கொண்டார். ஆண்டவனும் அருள்புரிந்தார். கிரேக்க நாட்டுக் கலைச் செல்வங்களே மேனாட்டின் கலை வளர்ச்சிக்கெல்லாம் அடிப்படையாக அமைந்திருக்கின்றன.

மனிதர்களுக்கு ஆன்மா உள்ளதுபோல் ஒரு நாட்டுக்கும் ஆன்மா உண்டு. அந்த ஆன்மா அந்த நாட்டிற்கே உரிய புராதனக் கலைதான். உடம்பில் நோய் வந்தால் தீர்த்துக்கொள்ளலாம்; ஆன்மாவுக்கே நோய் வந்துவிட்டால் அழிவுதான். அரசியலில் அடிமைப்பட்டிருந்தால் விடுதலை தேடிக்கொள்ளலாம்; செல்வம் பறிபோயிருந்தால் திரும்பச் சம்பாதித்துக் கொள்ளலாம்; ஆனால் கலை ஞானத்தை இழந்துவிட்டால் அந்த நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் கதிமோட்சமே கிடையாது.

மிக இனிமையான குரலில் பாடப்படும் ஸினிமா 'டப்பா' சங்கீதத்தைக் காட்டிலும், உடைந்த குரலை உடைய கர்நாடக சங்கீத வித்வான் பாடும் கல்யாணி ராக ஆலாபனத்தை அதிகமாக ரஸிப்பவர்கள் தென்னாட்டில் உள்ள வரையில் இந்நாட்டுக்கு உயிர் உண்டு. இத்தகைய ரஸிகர்கள் அற்றுப் போகும்போது தென்னாட்டின் ஆன்மா நோய்ப்பட்டு அழிந்து விட்டது என்று வைத்துக் கொள்ளலாம்.

"பாமர ஜனங்களுக்குப் பிடித்திருக்கிறது" "குழந்தைகள் ஸினிமாப் பாட்டையே விரும்புகிறார்கள்" என்று நம் இளம் நேயர்கள் சொல்லும் வாதங்கள் உண்மையில் நம்முடைய கட்சியையே பலப்படுத்துகின்றன.

நமது கலை எல்லாம் குழந்தைகளின் தரத்திலேயே இருக்க வேண்டுமா, என்ன! குழந்தைகள் பிரியப்படும் உணவையே அவர்களுக்கு அளித்துக்கொண்டிருப்போமா!

ஜனங்கள் அடிக்கடி எதைக் கேட்கிறார்களோ அதுவே அவர்களுடைய காதுக்குப் பழக்கமாகிப் பிடித்துப் போகிறது. நல்ல விஷயங்கள் ஜனங்களுக்குப் பிடிக்கும்படி செய்வது பெரியோர்களின் கடமை; பொதுஜன சர்க்காரின் முதன்மையான கடமை.

தென்னாட்டின் புராதன கலைச் செல்வங்களில் கர்நாடக சங்கீதம் தலை சிறந்தது. நமது சங்கீதத்துக்கு இணையான சங்கீதம் உலகத்திலேயே வேறு கிடையாது. அப்படிப்பட்ட கலைச் செல்வத்துக்குத் தீங்கு நேருவதைப் பார்த்துக் கொண்டிருப்பது நம் வருங்கால சந்ததிகளுக்குப் பெருந் தீங்கு செய்வதாகும்.

# சத்திய ஜயபேரிகையின் சஷ்டியப்த பூர்த்தி!

எத்தனையோ பேருக்குச் சமீப காலத்தில் சஷ்டியப்த பூர்த்தி வந்து போய்விட்டது! ஆனால் கோடையிடி காங்கிரஸ் ஏ. குப்புசாமி முதலியாரின் சஷ்டியப்த பூர்த்தி யென்றால், அதைச் சாமான்யமாகச் சொல்லி விடுவதற்கில்லை. ஏனெனில், பிராயம் அறுபது பூர்த்தியான போதிலும் கோடை இடி இன்னும் பேரிடியாகவே முழங்குகின்றது! வேலூர் ஏ. குப்புசாமி முதலியாரின் குரல் இன்னும் தயவு தாட்சண்யமில்லாத சத்திய ஜய பேரிகையின் குரலாகவே முழங்குகிறது! இந்தக் காசினியில் யாருக்கும் அஞ்சாத வீர சிங்கத்தின் கர்ஜனையாகவே சப்திக்கிறது! உலகத்தின் கஷ்ட சுகங்களைப் பொருட்படுத்தாத தேச பக்த தீரரின் குரலாகவே அவரது குரல் இன்னும் ஒலித்து வருகிறது! பட்டம் பதவிகளைத் திரணமாக மதிக்கும் தியாகியின் சங்காரதமாகவே அவருடைய இரும்புக் குரல் இன்னும் கர்ஜனை புரிந்து வருகிறது!

வாழ்க்கையில் பன்னிரண்டு ஆண்டுகள் சிறைச்சாலையில் தவம் செய்து கழித்த தேச பக்த வீரர் ஸ்ரீ ஏ குப்புசாமி முதலியாரின் அறுபது ஆண்டு நிறைவை முன்னிட்டு வடாற்காடு ஜில்லா தேச ஊழியர்கள் அவரைச் சிறப்பித்து வாழ்த்துக் கூறுவதற்காக வேலூரில் விழா நடத்துகிறார்கள் என்று அறிந்து மகிழ்கிறோம். இந்த மகிழ்ச்சிகரமான சந்தர்ப்பத்தில் நாமும் நமது மனமார்ந்த வாழ்த்துக்களை அவருக்குச் சமர்ப்பிக்க விரும்புகிறோம் :

"கோடை இடி குப்புசாமி முதலியார் நீடுழி வாழ்க! அவரது சத்திய ஜயபேரிகைக் குரல் என்றைக்கும் நிலைத்து வாழ்க!"

# கல்விக்குக் கால் இலட்சம்!

நமது கொழும்பு நிருபர் "ரஜனி" அறிவித்துள்ள பின் வரும் செய்தியை மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம்:—"இந்தியாவிலிருந்து சுமார் அறுபது வருடங்களுக்கு முன்னால் இலங்கையில் வந்து குடியேறிய பழைமையான இந்தியக் குடும்பத்தைச் சேர்ந்தவர் ஸ்ரீ ஆர். ஏ. நடேசன். தான தர்மங்களுக்குப் பெயர் போனது அவருடைய குடும்பம். குடும்பத்தின் பாரம்பர்யமான குணம் ஸ்ரீ நடேசனிடமும் அமோகமாக இருப்பதின் அறிகுறியாகக் கொழும்பில் இந்துக்களின் நீண்ட காலக் குறையை நிவர்த்தி செய்வதற்குத் தோன்றிய இந்துக் கல்லூரிக்கு அவர் ரூ. 25,000 நன்கொடை அளித்திருக்கிறார்.

"இலங்கையிலிருக்கும் இந்தியர்களுக்குப் பணம் சம்பாதித்துக் கொண்டு இந்தியாவுக்குத் திரும்புவதைத் தவிர வேறு இலட்சியம் கிடையாதென்பது ஒரு பொதுவான புகார். இலங்கையில் பெரும் பணக்காரர்களான இந்தியர்கள் கூட இந்தியாவிலே கோவில் கட்டுவோமா குளம் வெட்டுவோமா என்று எண்ணுகிறார்களேயன்றித் தாங்கள் சம்பாதித்த நாட்டில் தர்மங்கள் செய்வதில்லை யென்று அடிக்கடி புகார்கள் செய்யப்படுகின்றன. இந்தப் புகார்களில் உண்மையில்லை யென்றும் சொல்ல முடியாது. உதாரணமாக கொழும்பில் ஒவ்வொரு மதத்தவர்களுக்கும் பிரத்யேகமான உயர்நிலைப் பள்ளிக்கூடங்க ளிருக்கையில் இந்துக்களுக்கு மாத்திரம் அவ்விதக் கல்லூரிகளில்லை. பிற மதத்தவர்களுடைய கல்லூரிகளில் இந்து மாணவர்கள் சேர்ந்து படிப்பதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. இந்த நீண்ட காலக் குறையைப் போக்க ஒரு இந்துக் கல்லூரியைக் கொழும்பில் நிறுவியுள்ள பொழுதிலும் அதை விஸ்தரிக்க முடியாமலிருந்தது. இதை உணர்ந்த ஸ்ரீ ஆர். ஏ. நடேசன் பெருந்தொகையை நன்கொடையாக அளிக்க முன் வந்தது ஒரு நல்ல தர்ம கைங்கரிய மென்பதோடு, இந்தியச் சமூகத்தின் மீது கூறப்படும் புகாருக்கும் பரிகாரம் செய்ததாகும்.

"பிரஜாவுரிமைச் சட்டத்தை இலங்கை அரசாங்கம் அமுலுக்குக் கொண்டு வந்தவுடன் முதன் முதலாக இலங்கைப் பிரஜைகளாகியவர்களில் ஸ்ரீ ஆர். ஏ. நடேசனும் ஒருவர். இதற்காக இந்தியாவுடன் உள்ள கலாசார உறவை விட்டுவிடவும் அவர் தயாராயில்லை. சமீபத்தில் யாழ்ப்பாணத்திலே நடந்த நான்காவது தமிழ் விழாவின்பொழுது அவர் சிறப்பாகச் சேவை செய்தார். பல வருட காலமாய்க் கும்பகர்ண விரதத்தை அனுஷ்டித்துக் கொண்டிருந்த



கிழவரின் சவாரி!

இலங்கை இந்தியன் கிளப்பிற்குப் புத்துயிர் கொடுத்தார். இலங்கையர்களும் இந்தியர்களும் கலந்து உறவாடும் கலாசார ஸ்தாபனமாக இந்தியன் கிளப் இன்று வளர்ச்சியடைந்திருப்பதற்கு அவரே முக்கிய காரண புருஷர்...''

யாழ்ப்பாணத்தில் நடந்த தமிழ் விழாவுக்கு வந்திருந்த தமிழ் நாட்டு அன்பர்கள் பலர் ஸ்ரீ ஆர். ஏ. நடேசனும் அவருடைய குடும்பத்தாரும் சபையில் முன்னணியில் வீற்றிருந்து சொற்பொழிவுகளை ரஸித்துவந்ததை நினைவு கூர்ந்து மகிழ்வார்கள். தமிழ் விழாவுக்குப் பண வசூல் செய்யும் பொறுப்பை ஏற்றிருந்த ஸ்ரீ கனக ரத்தினம் அவர்களிடம் ஸ்ரீ ஆர். ஏ. நடேசன் ''தாங்கள் முடிந்த வரையில் வசூல் செய்யுங்கள்; மிச்சம் முழுவதை நான் ஏற்றுக் கொள்கிறேன்'' என்று சொல்லி ஊக்கப்படுத்தியதாக இலங்கைப் பிரதிநிதிகள் பேசிக் கொண்டதையும் நினைவு கூருவார்கள்.

இலங்கையின் பிரஜைகளாகப் பதிவு செய்து கொண்ட இந்திய தனிகர்கள் ஸ்ரீ ஆர். ஏ. நடேசன் காட்டியுள்ள வழியைப் பின்பற்றுவார்கள் என்று நம்புகிறோம்.



ஸ்ரீ ஆர். ஏ. நடேசன் தம்பதிகள்
(வித்தியா தானம்)

# குட்டிக் கொள்ளும் போதே முட்டிக் கொள்ளுகிறார்கள்!

அப்பாடா! ஒருமாதிரி இமயமலை இடம் பெயர்ந்தது. ஜனாப் கித்வாய் மந்திரி வேலையை ராஜினாமா செய்தே விட்டார். அவர் மகாராஜரா யிருக்கட்டும்! மகாராஜரா யிருக்க இஷ்டப்படா விட்டால் மகா ரிஷியா யிருக்கட்டும்! மகா ரிஷியாகி, ராஜரிஷி டாண்டனின் தாடியைப் பிடித்து உலுக்கட்டும்! அவர் உள்ளே யிருந்து செய்யும் குளறுபடியைக் காட்டிலும் வெளியேயிருந்து செய்யும் கலாட்டாவினால் காங்கிரசுக்கு அதிக நஷ்டம் ஒன்றும் விளைந்து விடாது அல்லவா!

போகிற போக்கில் ஜனாப் கித்வாய் ராஜரிஷி டாண்டன் பேரில் சாட்டிய பெரிய குற்றம் என்ன தெரியுமா! டாண்டன் கண்ட்ரோல்களுக்கு விரோதமாகப் பேசினார் என்பதுதான்!

ஆனால், இலட்சணத்தைக் கேளுங்கள்! அவர் காங்கிரஸிலிருந்து விலகிப் பிரஜா கட்சியில் காலை வைப்பதற்குள், பிரஜா கட்சியின் நிர்வாக சபையார் ''கண்ட்ரோல்களை அடியோடு ஒழிப்போமாக!'' என்று சபதம் கூறியிருக்கிறார்கள். வரும் பொதுத் தேர்தலில் பிரஜா கட்சி வெற்றியடைந்தால் கண்ட்ரோலை உடனடியாக ஒழித்துக் குழி தோண்டிப் புதைத்து ஈமக்கிரியை நடத்திவிட்டுத் தான் வேறு காரியத்தைப் பார்ப்பார்களாம்!

பிரஜா கட்சியின் இரு பெரும் தூண்களில் ஒன்று கித்வாய்; இன்னொன்று கிருபளானி.

இந்த இரு தூண்களும் கண்ட்ரோல் விஷயத்தில் ஒன்றோடொன்று முரண்பட்டு வெவ்வேறு பக்கம் சாய்ந்து நிற்கின்றன.

புதிய கட்சி ஆரம்பித்துச் 'சுக்லாம் பரதரம்' குட்டிக் கொள்வதற்குள்ளேயே இப்படி முட்டிக் கொள்ளுகிற மகா புத்திசாலிகள் தேசத்தையே உத்தாரணம் செய்துவிடப் போகிறார்கள் என்று எப்படி நம்புவது!

## அட்டைப்பட விளக்கம்

பழைய காலத்திலே ஒரு நாள் புத்த பகவான் கையில் பிக்ஷா பாத்திரத்தை ஏந்திக் கொண்டு தமது பூர்வாசிரமத்தில் வாழ்க்கைத் துணைவியாக இருந்த யசோதரையின் அரண்மனை வாசலுக்குச் சென்று பிக்ஷை கேட்டார்.

அது போலவே இன்று தமிழ் நாட்டுக்குக் 'கல்கி' அட்டையில் விஜயம் செய்கிறார்.

தமிழர்கள் இன்று புத்த பகவானை வரவேற்கத் தயாராய் இருந்தாலும் அவர் கையில் கமண்டலத்தைப் பார்க்கும்போது ஒருவிதக் கவலை உண்டாகலாம். 'எட்டு அவுன்ஸ் அரிசி ஆறு அவுன்ஸ் அரிசியாகக் குறையும் இந்தப் புனிதத் திருநாளில்தானா நம்மைச் சோதனை செய்ய வருவது போல் பகவான் தமிழ் நாட்டுக்கு எழுந்தருள வேண்டும்!' என்று எண்ணலாம்.

ஆனால் புத்தர் பெருமான் ஒரு பிடி அரிசிக்காகவோ, ஒரு கவளம் சோற்றுக்காகவோ நம் வாயிலை நாடி வரவில்லை.

நம்மிடையே மலிந்துள்ள அசூயை, பேராசை, அற்பத்தனம் முதலிய சிறுமைகளைப் புத்த பகவான் தமது பிக்ஷா பாத்திரத்தில் போடும்படி கேட்கிறார்.

கருணாமூர்த்தியான புத்தர் நமது சிறுமைகளைக் களைந்து நம்மை அன்பும் அருளும் தியாக சிந்தையும் உள்ள அமரர்களாக்க வந்திருக்கிறார். அவர் அடியைப் பணிவோம்!

# பொன்னியின் செல்வன்

## கல்கி

இருபத்து நாலாம் அத்தியாயம்

## அனலில் இட்ட மெழுகு

இனி 'கிறீச்' சிட்ட சத்தமும், தாதிப்பெண் பயத்துடன் கூவிய சத்தமும் கலந்து வந்து நந்தினியையும் கந்தமாறனையும் திடுக்கிடச் செய்தன. கந்தமாறன் திரும்பிப் பார்த்துப் பழுவேட்டரையர் வருகிறார் என்று அறிந்ததும் கதி கலங்கிப் போனான். சற்று முன்னால் அவன் 'பழுவேட்டரையரை எனக்கும் பிடிக்கவில்லை' என்று சொன்னது அவர் காதில் விழுந்திருக்குமோ என்ற எண்ணம் உதயமாயிற்று. அதைவிடப் பீதிகரமான எண்ணம், நந்தினியையும் தன்னையும் பற்றி அவர் ஏதேனும் தவறாக எண்ணிக் கொள்வாரோ என்ற நினைவு,—அவனுக்குத் திகிலை உண்டாக்கிற்று. இளம் பருவத்தில் கலியாணம் செய்து கொண்டவர்களின் போக்கே ஒரு தனி விதமாக இருக்குமல்லவா? ஆகையினாலேயே அவர் அவ்வளவு கோபமாக வந்து கொண்டிருக்க வேண்டும்! வந்து என்ன செய்யப் போகிறாரோ, தெரியவில்லை. எதற்கும் சித்தமாயிருக்க வேண்டியதுதான்.

இவ்வளவும் ஒரு நொடிப் பொழுதில் கந்தமாறன் மனதில் அலை எறிந்த சிந்தனைகள். ஆனால் அவனுக்கு அன்று ஒரு பெரிய அதிசயத்தைக் காணும் வாய்ப்புக் கிடைத்தது. அவன் நினைத்ததற்கெல்லாம் மாறாக அந்த அதிசயம் நடந்தது. பழுவேட்டரையர் அருகில் நெருங்கியதும் நந்தினி முகமலர்ந்து அவரைத் தன் கரிய விழிகளால் பார்த்து, "நாதா! எங்கே தாங்கள் திரும்பி வருவதற்கு அதிக நாள் ஆகிவிடுமோ என்று பார்த்தேன். நல்ல வேளையாக வந்து விட்டீர்கள்!" என்றாள். அவளுடைய முகத்தைப் பார்த்து அந்தக் குரலையும் கேட்டதும் பழுவேட்டரையரின் கோபாவேசமெல்லாம் பறந்துவிட்டது. அனலில் இட்ட மெழுகைப் போல் உருகிப் போனார். அசட்டுச் சிரிப்பு ஒன்று சிரித்து, "ஆமாம்; போன காரியம் முடிந்து விட்டது; திரும்பி விட்டேன்" என்றார்.

பிறகு கந்தமாறனைப் பார்த்து, "இந்தப் பிள்ளை இங்கே என்ன செய்கிறான்? ஏதாவது காதற் கவிதை புனைந்து கொண்டு வந்து கொடுத்தானோ?" என்று கேட்டுவிட்டுத் தம்முடைய பரிகாசத்தைக் குறித்துத் தாமே சிரித்தார்.

கந்தமாறனுடைய முகம் சிவந்தது. ஆனால் நந்தினி பழுவேட்டரையரை விட அதிகமாகச் சிரித்துவிட்டு, "இவருக்குக் காதலும் தெரியாது; கவிதையும் தெரியாது. சண்டை போட்டுக் காயமடையத்தான் தெரியும். நல்ல வேளையாகக் காயம் ஆறிவிட்டது. ஊருக்குப்போகவேண்டுமென்று சொல்லிக் கொண்டிருக்தார்!" என்றாள்.

"இந்தக் காலத்துப் பிள்ளைகளின் வீரத்தைத் தான் என்னவென்று சொல்வது? இருபத்துநாலு யுத்தகளங்களில் நான் அறுபத்துநாலு காயங்கள் அடைந்தவன். ஆனால் ஒரு தடவையாவது படுக்கையில் படுத்ததில்லை. இவனுக்குக் காயம் குணமாக ஒரு பட்சத்துக்கு மேலாகியிருக்கிறது. ஆனால் என் காயங்களெல்லாம் மார்பிலும் தோளிலும் தலையிலும் முகத்திலும் ஏற்பட்டவை. இந்தப் பிள்ளை முதுகிலே காயம்பட்டவன் அல்லவா? அதனால் இவ்வளவு நாள் ஆகிவிட்டது. நியாயந்தான்!" என்று கூறிப் பரிகாசச் சிரிப்புச் சிரித்தார்.

கந்தமாறன் கொதித்து எழுந்து, "ஐயா! தாங்கள் என் தந்தையின் ஸ்தானத்தில் உள்ளவர். அதனால் தங்களுடைய பரிகாசத்தைப் பொறுத்தேன்!" என்றான்.

"இல்லாவிட்டால், என்ன செய்திருப்பாயடா?" என்று பழுவேட்டரையர் கேட்டுத் தம் உறையிலிருந்த கத்தியில் கையை வைத்தார்.

நந்தினி இச்சமயம் குறுக்கிட்டாள். "நாதா! இவருக்கு முதுகில் மட்டும் காயமில்லை, நெஞ்சிலும் காயம் பட்டிருக்கிறது என்பது தங்களுக்குத் தெரிந்தது தானே! இவர் தம்முடைய சிநேகிதன் என்று நினைத்துக் கொண்டிருந்தவன் இம்மாதிரி முதுகில் குத்திப் போட்டுவிட்டுப் போய் விட்டான் என்ற எண்ணம் இவர் நெஞ்சில் பெரிய புண்ணை உண்டாக்கியிருக்கிறது. முதுகில் காயம் ஆறியும் நெஞ்சில் புண் ஆறவில்லை. அந்தப் புண்ணில் கோல் இடுவது போல் நாம் பேசக் கூடாது தானே? அன்றிரவு, இவர் காயம்பட்ட அன்றிரவு, என்ன நடந்தது என்று தங்களுக்குத் தெரியாதா, என்ன?" என்று சொல்லிக் கொண்டே நந்தினி பழுவேட்டரையரைப் பார்த்த பார்வையில் மறைபொருள் ஏதோ இருந்திருக்க வேண்டும்! பழுவேட்டரையரின் முகத்தோற்றம் உடனே மாறிவிட்டது!

"ஆமாம்; நீ சொல்வது சரிதான்! பாவம், இவன் அறியாப் பிள்ளை. இவன் தந்தையோ என் பிராண சிநேகிதர். இவன் ஏதோ தெரியாத்தனமாகக் கூறியதை நான் பொருட்படுத்தக் கூடாதுதான். அது கிடக்கட்டும். நந்தினி! ஒரு முக்கியமான விஷயம் சொல்வதற்காக இப்போது வந்தேன். அது இவனுக்கும் தெரிந்திருக்க வேண்டியதுதான். இலங்கை மாதோட்டத்தில் ஒருவனை ஒற்றன் என்று சந்தேகித்துப் பிடித்திருக்கிறார்களாம். அவனிடம் இளவரசன் அருள்மொழிவர்மனுக்கு ஓலை ஒன்றிருக்கிறதாம். அங்க அடையாளங்களிலிருந்து அவன் நம் கந்தமாறனுடைய அழகான சிநேகிதனாயிருக்கலாமென்று நினைக்கிறேன். அவன் பெரிய கைகாரனாய்த்தானிருக்கவேண்டும். நம் ஆட்களிடம் அகப்படாமல் தப்பி இலங்கைக்குச் சென்றுவிட்டான், பார்!" என்றார் பழுவேட்டரையர்.

நந்தினியின் முக பாவத்தில் அப்போது ஏற்பட்ட ஒரு கணநேர மாறுதலை மற்ற இருவரும் கவனிக்கவில்லை.

"அடே! தப்பிச்சென்றுவிட்டானா? இலங்கைக்கா போய் விட்டான்?" என்று கந்தமாறன் ஏமாற்றத்துடன் கூறினான்.

"நாதா! அவன் தப்பிச் சென்றது எனக்கு ஒன்றும் அதிசயமாய்த் தோன்றவில்லை. தங்கள் சகோதரர் இந்தக் கோட்டைக் காவலுக்குத் தகுதியற்றவர் என்றுதான் எத்தனையோ தடவை சொல்லியிருக்கிறேனே! அவர் அனுப்பிய ஆட்களும் அப்படித்தானே இருப்பார்கள்?" என்றாள் நந்தினி.

"முன்னெல்லாம் நீ அப்படிச் சொன்னபோது எனக்கு அது சரியாகப்படவில்லை. இப்போது எனக்குக் கூட அப்படித்தான் தோன்றுகிறது. இன்னும் ஒரு விந்தையைக் கேள்! மாதோட்டத்தில் அகப்பட்ட ஒற்றனிடம் நமது பழுவூர் இலச்சினை ஒன்று இருந்ததாம். அது அவனிடம் எப்படிக் கிடைத்தது என்று அவன் சொல்லவில்லையாம்!......"

நந்தினி இலேசாக ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு, "இது என்ன வேடிக்கை? பனை இலச்சினை அவனிடம் எப்படிக் கிடைத்ததாம்? தங்கள் சகோதரர் இதற்கு என்ன சொல்கிறார்?" என்றாள்.

"அவனா? அவன் சொல்வதைக் கேட்டால் உனக்குச் சிரிப்பு வரும்! அந்தப் பனை இலச்சினை உன்னிட

யிருந்து தான் அவனிடம் போயிருக்க வேண்டுமென்கிறான் காலாந்தகன்!" என்று சொல்லிவிட்டுப் பழுவேட்டரையர் இடி இடி யென்று சிரித்தார். அந்தச் சிரிப்பினால் லதா மண்டபமே குலுங்கியது போலிருந்தது. அரண்மனை நந்தவனத்து மரங்கள் எல்லாம் சிலிர்த்து நடுநடுங்கின.

நந்தினியும் அவருடன் சேர்ந்து சிரித்துக்கொண்டே "என் மைத்துனர் இருக்கிறாரே, அவருக்கு இணையான புத்திக் கூர்மை படைத்தவர் இந்த ஈரேழு பதினாலு உலகத்திலும் கிடையாது!" என்றாள்.

"இன்னும் உன் மைத்துனன் என்ன சொல்கிறான் தெரியுமா? நல்ல வேடிக்கை! அதை நினைக்க நினைக்க எனக்குச் சிரிப்பு வருகிறது! தஞ்சைக் கோட்டை வாசலில் நீ பல்லக்கில் வந்து கொண்டிருந்தபோது உன்னை அந்த இந்திரஜித்து சந்தித்துப் பேசினானாம். பிறகு இந்த அரண்மனைக்குள்ளும் அந்த மாயாவி வந்திருக்கிறானாம். ஆகையால் நீயே அவனிடம் பழுவூர் இலச்சினையைக் கொடுத்திருக்க வேணுமாம்! அப்படியில்லாவிட்டால், உன்னிடம் யாரோ ஒரு மந்திரவாதி அடிக்கடி வருகிறானே, அவன் மூலமாகப் போயிருக்க வேண்டுமாம்! தன்னுடைய முட்டாள்தனத்தை மறைப்பதற்காக அவன் இப்படியெல்லாம் கற்பனை செய்து உளறுகிறான்!" என்று கூறிப் பழுவேட்டரையர் தமது நீண்ட பற்கள் எல்லாம் தெரியும்படியாக மறுபடியும் ஹஹ்ஹஹ்ஹா என்று சிரித்தார்.

"என் மைத்துனருடைய அறிவுக் கூர்மையைப் பற்றி நான் சந்தேகித்தது ரொம்பத் தவறு. அவருடைய அறிவு உலக்கைக் கொழுந்துதான்! சந்தேகமில்லை! ஆனால் இதையெல்லாம் நீங்கள் கேட்டுக்கொண்டு சும்மா இருந்ததை நினைத்தால்தான் எனக்கு வியப்பாயிருக்கிறது!" என்றாள் நந்தினி. அவளுடைய முகபாவம் மறுபடியும் மாறி, அதில் இப்போது எள்ளும் கொள்ளும் வெடித்தது. கண்களில் தீப்பொறி பறந்தது.

வீராதி வீரரும் போர்க்களத்தில் எத்தனையோ வேல் வீச்சுகளை இறுமாந்து தாங்கியவருமான பெரிய பழுவேட்டரையர் நந்தினியின் சிறு கோபத்தைத் தாங்க முடியாமல் தடுமாறினார். அவருடைய தோற்றத்திலும் பேச்சிலும் திடீரென்று ஒரு தளர்ச்சி காணப்பட்டது.

"தேவி! நான் அதை யெல்லாம் சும்மாக் கேட்டுக் கொண்டிருந்தேன் என்றா நினைக்கிறாய்? அவனுடைய கையினாலாகாத்தனத்தைப் பற்றி மிகக் கடுமையாகப் பேசி அவனை அழவைத்து விட்டேன். நீ பார்த்திருந்தால் அவன்பேரில் இரக்கம் அடைந்திருப்பாய்!" என்றார்.

இதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த கந்தமாறன் பாடு சங்கடமாகிவிட்டது. நந்தினியினிடம் அவனுக்குச் சிறிது பயமும் பழுவேட்டரையரிடம் இரக்கமும் அவமதிப்பும் ஏற்பட்டன. இந்தச் சதிபதிகளின் தாம்பத்ய விவகாரத்தில் சிக்கிக் கொள்ளாமல் அங்கிருந்து போய்விட விரும்பினான். தொண்டையைக் கனைத்துக்கொண்டு "ஐயா!......" என்றான்.

நந்தினி குறுக்கிட்டு, "என் மைத்துனர் சாமர்த்தியத்தைப் பற்றிப் பேசுகையில் இவரை நாம் மறந்துவிட்டோம். இவர் ஊருக்குப் போகிறேன் என்று சொல்கிறாரே, போகலாம் அல்லவா?" என்று கேட்டாள்.

"நன்றாய்ப் போகலாம். இத்தனை நாள் இங்கே இவன் தங்கியிருந்தது பற்றியே இவனுடைய தந்தை கவலைப்பட்டுக் கொண்டிருப்பார்!"

"இவரிடம் ஓலை ஒன்று கொடுத்து அனுப்ப விரும்புகிறேன். கொடுக்கலாம் அல்லவா?"

"ஓலையா? யாருக்கு?"

"காஞ்சியிலுள்ள இளவரசருக்கு!"

பழுவேட்டரையர் நந்தினியையும் கந்தமாறனையும் சந்தேகக் கண்ணால் பார்த்து, "இளவரசருக்கு ஓலையா? நீயா எழுதுகிறாய்? எதற்கு?" என்று கேட்டார்.

"இளையபிராட்டி தம்பிக்கு ஓலை எழுதி இவர் சிநேகிதரிடம் அனுப்பியிருக்கிறார். பழுவூர் இளைய ராணி அண்ணனுக்கு ஏன் ஓலை எழுதக் கூடாது? எழுதி இவரிடம் ஏன் அனுப்பக்கூடாது?" என்றாள் நந்தினி.

"இவன் சிநேகிதன் கொண்டுபோன ஓலை இளைய பிராட்டி குந்தவை எழுதிய ஓலையா? உனக்கு அந்த

விஷயம் எப்படித் தெரிந்தது?" என்று பழுவேட்டரையர் கேட்டார்.

"பின்னே எதற்காக என்னிடம் மந்திரவாதி அடிக்கடி வருகிறானும்? அவன் மந்திரத்தின் மூலமாகத் தெரிந்தது. என் மைத்துனர் ஆட்களின் இலட்சணம்தான் தெரிந்திருக்கிறதே! பழுவூர் பனை இலச்சினை அவனிடம் இருப்பதாகக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து சொன்னவர்கள் ஓலை குந்தவை அனுப்பியது என்று சொல்லவில்லை, பாருங்கள்!"

"இலச்சினையைப் பற்றியும் நம் ஆட்கள் சொல்லவில்லை. அன்பில் பிரம்மராயர் இராமேசுவரம் போய் விட்டுத் திரும்பி வந்திருக்கிறார். அவர் கொண்டு வந்த செய்தி......"

"அந்தப் பிராம்மணனாவது குந்தவை தேவியின் ஓலையைப் பற்றித் தங்களிடம் சொன்னாரா?"

"இல்லை!"

"நாதா! நான் தங்களுக்கு எச்சரித்ததை எண்ணிப் பாருங்கள். இந்த ராஜ்யத்தில் உள்ள அவ்வளவு பேரும் சேர்ந்து தங்களை வஞ்சிக்கப் பார்க்கிறார்கள் என்று நான் சொல்லவில்லையா? இது உண்மை என்பது இப்போதாவது தங்களுக்குத் தெரிகிறதா? மந்திரவாதி சொன்னதை மட்டும் நான் நம்பிவிடவில்லை. கோடிக்கரையிலிருந்து சிறைப்படுத்திக் கொண்டு வந்த வைத்தியர் மகனையும் அழைத்து வரச்செய்து விசாரித்தேன். அவனும் அதை உறுதிப்படுத்தினான். இளையபிராட்டி தன் தம்பிக்கு ஓலை அனுப்பியிருப்பதாகச் சொன்னான்!" என்றாள் நந்தினி.

பழுவேட்டரையருக்குக் கண்ணைக் கட்டிக் காட்டிலே விட்டதுபோலிருந்தது. கந்தமாறனை அவர் அருவருப்புடன் பார்த்தார். அந்தச் சிறு பிள்ளையைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு இதையெல்லாம் பேசுவது அவருக்குப் பிடிக்கவில்லை.

இதைக் குறிப்பினால் உணர்ந்த நந்தினி, "நம்முடைய கதை இருக்கவே இருக்கிறது. இவருடைய பிரயாணம் ஏன் தாமதிக்க வேண்டும்?" என்று கூறி விட்டுக் கந்தமாறனைப் பார்த்து, "ஐயா! காஞ்சி இளவரசரிடம் இந்த ஓலையை நேரே கொண்டு போய்க் கொடுக்க வேண்டும். கொடுத்து விட்டு, அவர் மறு ஓலை கொடுத்தால் சர்வ ஜாக்கிரதையாக அனுப்பி வைக்க வேண்டும். தங்களுடைய கடம்பூர் மாளிகைக்கு இளவரசரை அழைப்பதற்கு மறந்துவிட வேண்டாம்!" என்றாள்.

"என் தந்தையிடம் என்ன சொல்ல? இது பழுவூர் மன்னரின் விருப்பம் என்று சொல்லலாம் அல்லவா?" என்று கந்தமாறன் சற்று தயக்கத்துடன் கேட்டான்.

"தாராளமாய்ச் சொல்லலாம். என்னுடைய விருப்பந்தான் பழுவூர் மன்னரின் விருப்பமும். நாதா! நான் சொல்வது சரிதானே?" என்றாள் நந்தினி.

"ஆமாம், ஆமாம்!" என்று பழுவேட்டரையர் தலையை அசைத்தார். அவருக்கு ஒன்றும் புரியவில்லை. தலை கிறுகிறுத்தது. நந்தினியை எதிர்த்துப் பேசவும் அவரால் இயலவில்லை.

* * *

கந்தமாறன் சென்ற பிறகு நந்தினி பழுவேட்டரையர் மீது தன் காந்தக் கண்களைச் செலுத்தி, கொஞ்சும் கிளியின் குரலில், "நாதா! என்னிடம் தங்களுடைய நம்பிக்கை குன்றி விட்டதாகத் தோன்றுகிறது! என் மைத்துனருடைய துர்ப்போதனை ஜயித்து விட்டதுபோல்காண்கிறது!" என்றாள்.

"ஒரு நாளுமில்லை, நந்தினி! என் கையில் பிடித்த வேலிலும், அரையில் செருகிய வாளிலும் எனக்கு நம்பிக்கை குறைந்தாலும் உன்னிடம் நம்பிக்கை குறையாது. வீர சொர்க்கத்தில் நான் நம்பிக்கை இழந்தாலும் உன் வார்த்தையில் நம்பிக்கை இழக்கமாட்டேன்!" என்றார்.

"இது உண்மையானால், அந்தச் சிறு பிள்ளையை வைத்துக் கொண்டு, என்னிடம் அவ்வளவு கேள்வி கேட்டீர்களே, ஏன்? எனக்கு அவமானமாயிருந்தது!" என்று நந்தினி கூறிய போது, அவள் கண்களில் கண்ணீர் பெருகத் தொடங்கியது.

பழுவேட்டரையர் துடிதுடித்துப் போனார். "வேண்டாம், என் கண்ணே! இப்படி என்னைத் தண்டிக்க வேண்டாம்!" என்று கூறி, நந்தினியின் கண்களில் பெருகிய கண்ணீரைத் துடைத்துச் சமாதானம் செய்தார்.

"ஆயினும் உன்னுடைய காரியங்கள் சில எனக்கு அர்த்தமாகவில்லை. என்ன, ஏது, எதற்காக என்று கேட்க எனக்கு உரிமை இல்லையா?" என்றார்.

"கேட்பதற்குத் தங்களுக்கு உரிமை உண்டு; சொல்வதற்கும் எனக்கு உரிமை உண்டு. யார் இல்லை என்றார்கள்? அன்னியர்கள் முன்னால் கேட்கவேண்டாம் என்றுதான் சொன்னேன். என்ன வேண்டுமோ இப்போது கேளுங்கள்!" என்றாள்.

"ஆதித்த கரிகாலனுக்கு நீ எதற்காக ஓலை கொடுத்து அனுப்புகிறாய்? கடம்பூர் மாளிகைக்கு எதற்காக அவனை அழைக்கச் சொல்லுகிறாய்? அவன் அல்லவா நம்முடைய யோசனை நிறைவேறுவதற்கு முதல் விரோதி?" என்றார் பழுவேட்டரையர்.

"இல்லை, இல்லை! ஆதித்த கரிகாலர் நம் முதல் விரோதி இல்லை. அந்தப் பழையாறைப் பெண்பாம்புதான் நம் முதல் விரோதி. அவனை எதற்காக நம் அரண்மனைக்கு நான் அழைத்தேன்? அந்தக் காரணத்துக்காகவே தான் ஆதித்த கரிகாலனைக் கடம்பூருக்கு அழைக்கச் சொல்கிறேன். நாதா! நான் அடிக்கடி சொல்லி வந்திருப்பதை இப்போது ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். இளைய பிராட்டி குந்தவை தன் மனதிற்குள் ஏதோ ஒரு தனி யோசனை வைத்திருக்கிறாள் என்று சொல்லி வந்தேன் அல்லவா? அது என்னவென்று இப்போது கண்டுபிடித்து விட்டேன். மற்ற எல்லாரையும் விலக்கிவிட்டு அவளுடைய இளைய சகோதரன் அருள்மொழி வர்மனைத் தஞ்சாவூர் சிம்மாசனத்தில் ஏற்றிவைக்க அவள் தீர்மானித்திருக்கிறாள். அதற்காகவே அவன் இலங்கைக்குத் தூதனை அனுப்பியிருக்கிறாள். அதற்காகவே இப்போது தஞ்சைக்கு வந்திருக்கிறாள். அவளுடைய சூழ்ச்சிக்கு எதிர் சூழ்ச்சி செய்து அவளுடைய நோக்கம் நிறைவேறாமல் செய்யவேண்டும். காஞ்சிக்கு நான் ஓலை அனுப்பியதன் காரணம் இப்போது தெரிகிறதல்லவா?" என்று நந்தினி கேட்டுவிட்டுப் பழுவேட்டரையரைப் பார்த்த பார்வை அவருடைய நெஞ்சை ஊடுருவி அவர் அறிவை நிலைகுலையச் செய்தது.

ஒன்றும் தெரியாவிட்டாலும் "ஆம், தெரிகிறது!" என்று குழறினார் அந்த வீரக் கிழவர்.

"நாதா! தாங்களும் தங்கள் முன்னோர்களும் புரிந்த அரும்பெரும் வீரச் செயல்களினாலேயே இன்று இந்தச் சோழ சாம்ராஜ்யம் இவ்வளவு பல்கிப் பரவியிருக்கிறது. இந்தத் தஞ்சை புரியின் தங்கச் சிங்காதனத்தில் ஒரு நாளாவது தங்களை ஏற்றி வைத்துப் பார்க்கும் வரையில் இந்தப் பாவியின் கண்கள் இரவிலும் பகலிலும் தூங்கப் போவதில்லை! அதற்குள்ளே எந்த விதத்திலாவது தங்களுக்கு என் பேரில் சந்தேகம் ஏற்படும் பட்சத்தில் தங்கள் உடைவாளினால் என்னை ஒரே வெட்டாக வெட்டிக் கொன்று விடுங்கள்!" என்றாள் நந்தினி.

"என் கண்ணே! இத்தகைய கர்ண கடூரமான மொழிகளைச் சொல்லி என்னைச் சித்திரவதை செய்யாதே!" என்றார் பெரிய பழுவேட்டரையர்.

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

# மாதோட்ட மாநகரம்

நமது கதா நாயகன் வந்தியத்தேவனை நாம் விட்டுப் பிரிந்து நெடுங்காலம் ஆகி விட்டது. தஞ்சையிலேயே அதிக நாள் தங்கி விட்டோம். சில நாள்தான் என்றாலும் நெடுங்காலமாகத் தோன்றுகிறது.

இந்தச் சில நாளைக்குள் வந்தியத்தேவன் ஈழத்துக் கடற்கரையோடு நடந்து சென்று பாலாவி நதிக்கரையில் இருந்த மாதோட்ட மாநகரை அடைந்திருந்தான்.

இராமேசுவரக் கடலுக்கு அப்புறத்தில் ஈழநாட்டுக் கடற்கரையில் இருந்த அம் மாநகரம் திருஞான சம்பந்தர் காலத்திலும் சுந்தரமூர்த்தியின் காலத்திலும் இருந்தது போலவே இப்போதும் பசுமையான மரங்கள் அடர்ந்த சோலைகளினால் சூழப்பட்டுக் கண்



னுக்கு இனிய காட்சி அளித்தது. மாவும், பலாவும், தென்னையும், கமுகும், கதலியும், கரும்பும் அந்த கரையைச் சுற்றிலும் செழித்து வளர்ந்திருந்தன. அந்த மரங்களில் வானரங்கள் ஊஞ்சலாடின; வரி வண்டுகள் பண்ணிசைத்தன; பைங்கிளிகள் மழலை பேசின.

அந்நகரின் கோட்டை மதில்களின் மேல் கடல் அலைகள் மோதிச் சலசல வென்று சத்தம் உண்டாக்கின.

மாதோட்ட நகரின் துறைமுகத்தில் பெரிய மரக்கலங்கள் முதல் சிறிய படகுகள் வரையில் நெருங்கி நின்றன. அவற்றிலிருந்து கரையில் இறக்கப்பட்ட பண்டங்கள் மலை மலையாகக் குவிந்து கிடந்தன.

இவை எல்லாம் சம்பந்தர் — சுந்தரர் காலத்தில் இருந்தது போலவே இருந்தாலும், வேறு சில மாறுதல்கள் காணப்பட்டன. மாதோட்ட நகரின் வீதிகளில் இப்போது கேதீசுவர ஆலயத்துக்குச் செல்லும் அடியார்களின் கூட்டத்தை அதிகம் காணவில்லை. பக்தர்கள் இறைவனைப் பாடி பரவசமடைந்த இடங்களிலெல்லாம் இப்போது போர் வீரர்கள் காணப்பட்டனர். கத்தியும் கேடயமும் வாளும் வேலும் கையில் கொண்ட வீரர்கள் அங்குமிங்கும் திரிந்தார்கள்.

சென்ற நூறு ஆண்டுகளுக்கு அதிகமாக அந்த நகரம் ஒரு யுத்த கேந்திர ஸ்தலமாக விளங்கி வந்தது. தமிழ் நாட்டிலிருந்து ஈழத்துப் போருக்கு வந்த படைகள் பெரும்பாலும் அங்கேதான் இறங்கின. திரும்பிச் சென்ற படைகளும் அங்கேதான் கப்பல் ஏறின. நகரம் பல தடவை கை மாறி விட்டது. சில சமயம் இலங்கை மன்னர்களிடமும் சில சமயம் பாண்டிய அரசர்களிடமும் அது இருந்தது. பராந்தக சக்கரவர்த்தியின் காலத்திலிருந்து சோழர்களின் ஆதிக்கத்தில் இருந்து வந்தது.

அத்தகைய யுத்த கேந்திர நகரத்தின் கோட்டை மதில் வாசலில் ஒரு நாள் வந்தியத்தேவன் வந்து நின்றான். நகருக்குள் போகவேண்டும் என்றான். சோழ சேனாதிபதியைப் பார்க்க வேண்டும் என்றான். காவலர்கள் அவனை உள்ளே விட மறுத்தார்கள். அதன் பேரில், முன்னர் கடம்பூரில் கையாண்ட யுக்தியை இங்கும் அவன் கையாண்டான். காவலர்களைப் பலவந்தமாகத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழையப் பிரயத்தனம் செய்தான். காவலர்கள் அவனைச் சிறைப்பிடித்துக் கோட்டைத் தலைவனிடம் கொண்டு போனார்கள். வந்தியத்தேவன் கோட்டைத் தலைவனிடம் இளவரசர் அருள்மொழி வர்மருக்கு முக்கியமான ஓலை கொண்டு வந்திருப்பதாகவும் அதைப் பற்றிச் சோழ சேனாதிபதியிடம்தான் விவரம் சொல்ல முடியும் என்றும் கூறினான். அவனைப் பரிசோதித்துப் பார்த்தார்கள். 'பொன்னியின் செல்வ'னுக்கு ஓர் ஓலையும் பழுவூர் பனை இலச்சினையும் அவனிடம் இருக்கக் கண்டார்கள்.

கொடும்பாளூர்ப் பெரிய வேளார் பூதி விக்கிரம கேசரி அச்சமயம் இலங்கைப் படையின் சேனாதிபதியாக இருந்தார். அவரிடம் போய்ச் சொன்னார்கள். பூதி விக்கிரம கேசரி அப்போது முதன் மந்திரி அநிருத்தராயருடன் பேசிக் கொண்டிருந்தார். அவருடன் இராமேசுவரம் வரையில் போவதற்கு ஆயத்தமாக இருந்தார். ஆகையால் திரும்பி வந்து விசாரிப்பதாகவும் அதுவரையில் அந்த வீரனைக் காவலில் வைத்திருக்கும்படியும் சொல்லிவிட்டுப் போனார்.

பிறகு வந்தியத்தேவனை அழைத்துப் போய் ஒரு பாழடைந்த மாளிகையில் ஓர் அறையில் தள்ளிப் பூட்டினார்கள். வாசலில் காவலும் போட்டார்கள்.

வந்தியத்தேவன் நீண்ட வழிப் பிரயாணத்தினால் களைப்படைந்திருந்தான். ஆகையால், தன்னைச் சிறைப் படுத்தியது குறித்து அவன் மகிழ்ந்தான். இரண்டொரு நாள் அலைச்சலின்றி ஓய்வு பெறலாம் அல்லவா?

முதல் நாள் அவனுக்கு அத்தகைய ஓய்வு கிடைத்தது. ஆனால் இரண்டாம் நாள் ஒரு தொல்லை ஏற்பட்டது.

அவன் இருந்த அறைக்கு அடுத்த அறையில் ஏதேதோ விசித்திரமான சத்தங்கள் கேட்கத் தொடங்கின. யாரோ ஒருவன் இன்னொருவனை அதட்டி மிரட்டினான். அவனுடைய வீரப் பேச்சுக்கள் பிரமாதமாயிருந்தன. "இந்தா!" "ச்சீ!" "போ போ!" "கிட்ட வராதே!" "அருகில் வந்தாயோ கொன்று விடுவேன்!" "அடித்து நொறுக்கி விடுவேன்!" "ஜாக்கிரதை!" "உன் உயிர் உன்னுடையதல்ல!" "யம லோகத்துக்கு அனுப்பி விடுவேன்!" "ஒரே உதையில் உன் உயிர் போய் விடும்!" என்று இப்படியெல்லாம் அடுத்த அறையில் ஒருவன் இரைந்து கொண்டிருந்தான். யாரைப் பார்த்து இப்படி அவன் வீர வாதமிடுகிறான் என்று தெரியவில்லை. ஒரே குரல்தான் கேட்டதே தவிர, அதற்கு எதிர்க் குரல் கேட்கவில்லை. ஒருவேளை யாராவது பைத்தியம் பிடித்த போர் வீரனாயிருக்குமோ என்ற சந்தேகம் ஏற்பட்டது. அப்படியென்றால், இரவெல்லாம் தூக்கமில்லாமல் செய்து விடுவானே? கொஞ்சம் தூங்கலாம் என்றால் அதற்கும் இடையூறு நேர்ந்து விட்டதே!......

"சொன்னால் கேட்க மாட்டாயா? சும்மாப் போகமாட்டாயா! சரி, சரி! உன்னை என்ன செய்கிறேன், பார்!"

இந்த வார்த்தைகளுக்குப் பிறகு தொப்பென்று அவனுடைய அறையில் வந்து ஏதோ விழுந்தது. படுத்திருந்த வந்தியத்தேவன் தூக்கிவாரிப் போட்டு எழுந்தான். விழுந்தது என்னவென்று உற்றுப் பார்த்தான். உடனே அவனையறியாமல் சிரிப்பு வந்தது. கலகலவென்று சிரித்தான். ஏனெனில், அடுத்த அறையிலிருந்து அப்படி வேகமாக வந்து விழுந்தது ஒரு பூனை என்று தெரிந்தது!

"ஓஹோ! உனக்குச் சிரிக்க வேறே தெரியுமா? சிரி! சிரி! மறுபடியும் இங்கே மட்டும் வராதே!" என்று அந்தக் குரல் சொல்லியது.

யாரோ பைத்தியக்காரன் என்பதில் சந்தேகமில்லை. இல்லாவிட்டால் பூனையுடன் இவ்வளவு வாதமிடுவானா? அல்லது பூனை மனிதரைப் போல் சிரிக்கும் என்றுதான் எண்ணுவானா? ஆனால், அதிலும் ஓர் அதிசயம் என்னவென்றால், அப்படியெல்லாம் பேசிய குரல் அவனுக்குத் தெரிந்த குரலோ என்ற சந்தேகம் உண்டாயிற்று. எங்கேயோ, எப்போதோ கேட்ட குரலாகத்



தோன்றியது. ஆனால் யாருடைய குரல்? எங்கே கேட்ட குரல்?-நினைத்து நினைத்துப் பார்த்தும் ஞாபகம் வரவில்லை!

எப்படியாவது இருக்கட்டும், யாராவது இருக்கட்டும் என்று எண்ணி வந்தியத்தேவன் படுத்துக் கொண்டான். கண்ணை மூடித் தூங்கப் பார்த்தான். ஆனால் தூங்க முடியவில்லை. சற்று நேரத்துக்கெல்லாம் உள்ளங் கால்களில் ஏதோ வழ வழ வென்று தட்டுப்பட்டது. கண்ணைத் திறந்து பார்த்தால் பூனை அங்கே படுத்திருந்தது. அட கடவுளே! இதைக் கால்மாட்டில் வைத்துக் கொண்டு எப்படித் தூங்குவது? உதைத்துத் தள்ளினான். பூனை நகர்ந்து சென்றது. கண்ணை மூடினான். மறுபடி அவன் பக்கத்தில் கையில் ஏதோ மிருதுவாகத் தட்டுப் பட்டது. கண்ணைத் திறந்து பார்த்தால் பூனை அவன் பக்கத்தில் வந்து படுத்துக் கொண்டு செல்லம் கொஞ்சிக் கொண்டிருந்தது!

மறுபடியும் கையினால் பிடித்துத் தள்ளினான். பூனை தூரச் சென்றது. மீண்டும் கண்ணை மூடினான். தலைமாட்டில் வந்து பூனை படுத்துக் கொண்டு வாலினால் அவனுடைய நெற்றியைத் தடவத் தொடங்கியது.

வாளையும் வேலையும் அச்சமின்றித் தாங்கக் கூடிய அவ்வீரனுக்குப் பூனை தன் வாலினால் தடவும் அநுபவத்தைத் தாங்க முடியவில்லை. எழுந்து பூனையை அதன் கழுத்தைப் பிடித்துத் தூக்கினான். அவனுடைய அறைக்கும் அடுத்த அறைக்கும் மத்தியில் இருந்த சுவரின் உச்சியில் கொஞ்சம் இடிந்து பொக்கை விழுந்திருந்தது. அதன் வழியாகப் பூனையைத் தூக்கி எறிந்தான்.

அடுத்த அறையில் சிறிது நேரம் ஒரே ரகளையாயிருந்தது. மனிதக் குரலின் கூப்பாட்டுடன் பூனையின் கராமுரா சத்தமும் சேர்ந்து கொண்டது. சற்று நேரத்துக்குப் பிறகு, "போ! தொலை!" என்ற குரல் கேட்டது. பூனையின் மியாவ் மியாவ் சத்தம் கொஞ்ச தூரம் வரையில் சென்று மறைந்தது. பிறகு நிச்சப்தம் நிலவியது.

வந்தியத்தேவன் கண்ணயர்ந்தான். அரைத் தூக்க நிலையில் ஒரு கனவு கண்டான். மிக இன்பமான கனவு. இளையபிராட்டி குந்தவை அவன் அருகில் வந்து உட்கார்ந்து அவன் நெற்றியைத் தடவிக் கொடுத்தாள். ஆகா! பூனையின் வாலுக்கும் இளவரசியின் கைவிரலுக்கும் எத்தனை வித்தியாசம்!

சட்டென்று மறுபடி விழிப்பு வந்தது. கனவு கலைந்துவிட்டதே என்று வருத்தமாயிருந்தது.

அடுத்த அறையிலிருந்து யாரோ சுவரைத் தட்டினார்கள். அந்தப் பைத்தியமாகத்தான் இருக்கவேண்டும்.

"யார் அங்கே? பூனையை எடுத்து எறிந்தது யார்?"

வந்தியத்தேவன் மறுமொழி சொல்லவில்லை; மௌனமாயிருந்தான். ஆ! இது என்ன, பூனை பிராண்டுவது போன்ற சத்தம் மறுபடியும்? இல்லை, இல்லை! யாரோ அப்புறத்தில் சுவரில் ஏறுவதற்கு முயல்கிறார்கள்!

வந்தியத்தேவன் எழுந்திருக்கவில்லை. படுத்தபடியே கவனமாய்க் காது கொடுத்துக் கேட்டுக் கொண்டிருந்தான். ஆனால் முன் ஜாக்கிரதையாகக் கைமட்டும் கத்திப் பிடியில் இருந்தது.

சுவரின் உச்சியிலிருந்த பொக்கையில் முதலில் இரு கைகள் தெரிந்தன. பிறகு ஒரு முண்டாசு தெரிந்தது. முண்டாசுக் கடியில் ஒரு முகம் மேலே வந்து குனிந்து பார்த்தது.

ஆ! இவன் ஆழ்வார்க்கடியான் அல்லவா? தலைப்பாகை கட்டியிருப்பதால் தோற்றத்தில் சிறிது மாறியிருக்கிறான்! ஆனால் ஆழ்வார்க்கடியான் என்பதில் சந்தேகமில்லை.

இவன் எதற்காக, எப்படி இங்கே வந்தான்? நாம் இருப்பது தெரிந்துதான் வந்திருக்க வேண்டும்! உதவி செய்ய வந்திருக்கிறானா? அல்லது இடையூறு செய்ய வந்திருக்கிறானா?

வந்தியத் தேவன் எழுந்து உட்கார்ந்து "ஓ வீர வைஷ்ணவரே! வருக! வருக! சிவபுண்ய ஸ்தலமாகிய திருக்கேதீசுவரத்துக்கு வருக! வருக!" என்றான்.

"தம்பி! நீதானா? நினைத்தேன்! வேறு யார் இவ்வளவு அழுக்குப் பிள்ளையாராகக் குரல் காட்டாமல் உட்கார்ந்திருக்க முடியும்?" என்று ஆழ்வார்க்கடியான் சொல்லிக்கொண்டு அறையில் குதித்தான். (தொடரும்)

# மனித சுபாவம்

சங்கரசுப்பு

ஈஸிசேரில் சாய்ந்தவாறு, காப்பியை ரசித்துக் குடித்துக் கொண்டிருந்தேன். வாசலை நோக்கியிருந்த ஜன்னல் வழியாக ஒரு தினசரியைத் திணித்து உள்ளே எறிந்துவிட்டுப் பக்கத்து வீட்டை நோக்கி ஓடினான் பத்திரிகைக்காரப் பையன்.

கீழே பறந்து விழுந்த பத்திரிகையை என் பக்கத்தில் நின்று கொண்டிருந்த என் மனைவி ஹேமா உடனே சென்று எடுத்து வந்து முன் பக்கத்திலிருந்த தலைப்புக்களைப் படிக்க ஆரம்பித்தாள்.

திடீரென்று, "இதைப் பார்த்தீர்களா? யாரோ ஒரு ஸேட்ஜியாம். நாலு முரடர்கள் 'பைக்குல்லா' பாலத்துக் கருகில் தாக்கி, ஸேட்ஜி வசமிருந்த பத்தாயிரம் ரூபாய் பணத்தையும் பறிமுதல் செய்து கொண்டு போய் விட்டார்களாம். பாவம்! இரவு முழுவதும் பாலத்தின் அடியிலேயே நினைவின்றிக் கிடந்தாராம். இப்போது ஆஸ்பத்திரியில் இருக்கிறாராம். அவர் உயிருக்கு ஆபத்து ஒன்றுமில்லையாம்" என்றாள்.

"யார், ஸேட்ஜியா? தொகை என்ன? பத்தாயிரமா? அவர் பெயர் என்னவென்று கொடுத்திருக்கிறார்கள்?"

"சந்திரகாந்த் ராவல்"

"என்ன? சந்திரகாந்த் ராவலா? அங்கேயே புகைப் படத்தையும் பிரசுரித்திருக்கிறார்களா?"

"ஆஹா! இதோ பாருங்கள்!"

"ஆமாம். இவனேதான்! இவனுக்கு நன்றாக வேண்டும். பத்தாயிரம் ரூபாயும் போச்சா? இன்னும் போனால்கூட எனக்குத் திருப்திதான்."

"என்ன? ஏதோ, உங்களுடைய பங்காளிக்காரர்களில் ஒருவன் சொத்தைப் பறி கொடுத்து விட்டது போலல்லவா சந்தோஷப் படுகிறீர்கள்! விஷயம் என்ன? விரிவாகச் சொல்லுங்கள்."

"விஷயமா? நான் இன்னும் உன்னிடம் சொல்லவில்லையா? நேற்றுச் சாயங்காலம் நானும் என் சிநேகிதர் கோபால் ஸோமயாஜுலுவும் 'கல்பா தேவி'க்குச் சாமான்கள் வாங்கப் போயிருந்தோம். எங்கள் ஆபீஸ் வாசலிலிருந்தே டிராம் வண்டி பிடித்துக் கல்பாதேவிக்குப் போக நினைத்தோம். எல்லா வண்டிகளிலும் ஒரே கூட்டமாயிருந்தது. சாயங்கால வேளையோ, இல்லையோ! ஆகவே, நாங்கள் கொஞ்ச தூரம் நடந்தே சென்றோம். எங்களை மோதும் வண்ணம் ஒரு டிராம் வண்டி உரசிக்கொண்டு சென்றது."

"உரசிக் கொண்டு போச்சா? ஏன், அப்படி நடுத்தெருவில் நடக்கணும்? நடை பாதையிலே நடக்கிறதுதானே? அதுதான் பெரிதாகக் கட்டிவிட்டிருக்கிறார்களே!" என்று சொல்லிவிட்டுத் தன் தாலிச் சரட்டைத் தொட்டுப் பார்த்துக் கொண்டாள் ஹேமா.

"தாலி எங்கேயும் ஓடிவிடாது. நான் தான் இங்கிருக்கிறேனே! முதலில் கதையைக் கேளு."

ஹேமா ஒரு முக்காலியை எடுத்துப் போட்டுக் கொண்டு என் எதிரில் வந்து உட்கார்ந்தாள்.

நான் தொடர்ந்தேன்:— அந்த டிராம் வண்டியில் கூட்டம் அதிகமில்லை.

அந்த டிராமைப் பிடிக்கலாம் என்று எண்ணி, இருவரும் வண்டி நிற்கப் போகுமிடத்துக்கு விரைந்தோம்.

நாங்கள் வண்டியைப் பிடிக்குமுன், அது நின்ற இடத்திலிருந்து கிளம்பி விட்டது. நாங்கள் ஓடி டிராம் வண்டியை அநேகமாகப் பிடித்து விட்டோம். ஆனால் எங்களைப் போல எங்கள் முன் ஒரு ஸேட்ஜி குறுக்கே ஓடி, வண்டியில் தொத்திக் கொண்டான். எங்களால் வண்டியைப் பிடிக்க முடியவில்லை. ஸேட்ஜி ஏறின வேகத்தில் அவன் ஜிப்பாவின் பக்கவாட்டு ஜேபியிலிருந்து ஒரு மணி பர்ஸ் கீழே தெறித்தாற்போல் விழுந்தது. தன் ஜேபியிலிருந்து மணி பர்ஸ் விழுந்தது ஸேட்ஜிக்குத் தெரியாது. டிராம் வண்டி அங்கிருந்து நகர்ந்து விட்டது.

என் நண்பர் ஸோமயாஜுலு கீழே குனிந்து பர்சைக் கையிலெடுத்தார். பிறகு அவர் தன் திறந்த உள்ளங்கையில் மணி பர்சை நிறுத்த வண்ணம் "ரொம்பக் கனமாயிருக்கிறது" என்றார்.

"திறந்துதான் பாருங்களேன்! பங்கிட்டுக் கொள்வோம்" என்று நான் பறந்தேன்.

"ஆசையைப் பாரு? ஊரார் பணத்தைப் பங்கிட்டுக் கொள்வோம் என்று சொல்லும் பொழுது உங்களுக்கு வெட்கமாயில்லை?"

"ஏன்? தவறு என்ன? புதையல் அல்லவா கிடைத்தது?"

"புதையலா? பேஷ்தான் போங்கள். ஓடும் பாம்பைப் புடலங்காய் என்று நினைத்துப் பையில் எடுத்து வாருங்களேன், பார்க்கிறேன்."

நண்பர் ஸோமயாஜுலுவும் உன் மாதிரி அசடுதான். "பணத்தைப் பங்கு பிரித்துக் கொள்ளவாவது? என்ன ஐயா

இது? யார் பணம்? என்னது? என்னமோ பணத்தைப் பங்கு பிரித்துக் கொள்ளலாம் என்கிறீரே? பர்சைத் திறந்து பார்க்கவே நமக்குச் சிறிதும் உரிமை கிடையாதே, ஐயா!'' என்று வேதாந்தம் பேசினார்.

''சரிதான். ஐயா! பர்சைப் பிரித்து விலாச மிருக்கிறதா, புகைப் படமிருக்கிறதா என்று பாரும்!'' என்றேன் நான்.

''ஊஹூம்...'' என்றார் நண்பர்.

''ஊஹூமா? அப்புறம் எப்படிப் பர்சை அதன் உரிமையாளரிடம் சேர்க்கப் போகிறீர்? விலாசம் தெரிய வேண்டாமா?'' என்றேன்.

பிறகுதான் அவர் பர்சைத் திறந்தார். அதில் இந்தப் புகைப்படம் இருந்தது. பெயரும் விலாசமுமிட்ட ஒரு சிறிய 'விஸிட்டிங் கார்டு'ம் இருந்தது. அதிலிருந்து ஸேட்ஜி ஒரு பெரிய வியாபாரி என்று தெரிந்தது.

''பணம் எவ்வளவு இருக்கிறது, பாரும்'' என்றேன். பணத்தை எண்ணினார். நூறு ரூபாய் நோட்டுக்களாகப் பத்தாயிரத்துக்கு இருந்தது. அதைத் தவிர சில வெள்ளி ரூபாய் நாணயங்களும் சில்லறையு மிருந்தன.

''அந்த ஸேட் ரொம்ப தூரம் போய் இருக்க மாட்டான். மேலும் அந்த டிராம் வண்டி 'கல்பாதேவி'யுடன் நின்று விடுகிறது. வாரும் அவனைக் கண்டு பிடித்துப் பர்சை ஒப்படைத்து விட்டு வருவோம்'' என்றார் நண்பர்.

''இப்படியும் இந்தக் காலத்திலே இருக்கிறார்களே'' என்று நண்பரை நான் மனத்துள் திட்டினேன்.

பிறகு ஒரு டிராம் வண்டியைப் பிடித்துக் 'கல்பாதேவி'க்குச் சென்றோம்.

டிராம் வண்டியிலிருந்து இறங்கினவுடனேயே ஸேட்ஜியைக் கண்டு பிடித்து விட்டோம். அப்போதுதான் அவன் டிராம் டிக்கெட் இன்ஸ்பெக்டரிடம் பர்சு தொலைந்து போன விஷயத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தான்.

ஸோமயாஜுலு தானாகவே அந்த ஸேட்டிடம் சென்று, ''இது உம்முடையது தானா பாரும். நீர் 'பிளோரா பவுண்ட'னில் டிராம் பிடிக்கும் போது கீழே விழுந்து விட்டது. அப்போது டிராம் பிடிக்கவந்த நான் வண்டியைக் கோட்டை விட்டு விட்டேன். கீழே விழுந்த பர்சை நான் எடுத்தேன்'' என்று சொல்லி மணி பர்சைக் கொடுத்தார்.

ஸேட்ஜி வந்தனம் கூடச் சொல்லாமல் பர்சை வாங்கி, அதைத் திறந்து நூறு ரூபாய் நோட்டுக்களை எண்ண ஆரம்பித்தான். எண்ணி முடித்த பிறகு, ''ஐயா, வந்தனம். பணம் சரியாக இருக்கிறது. ஒரு காரியத்துக்காக அவசரமாக இதை எடுத்துக் கொண்டு வந்தேன்'' என்றான்.



கோபால் ஸோமயாஜுலுவின் முகத்தைப் பார்த்தேன். சிவப்புச் சிதைந்து விட்டிருந்தது. பிறகு ஸேட்ஜி, ''வாருங்கள். தேநீர் சாப்பிட்டுவிட்டுப் போகலாம்'' என்றான்.

நண்பர், ''வேண்டாம், உங்களுக்கு வந்தனம்'' என்று கண்டிப்பாக மறுத்தார்.

''இந்தாருங்கள், தாங்கள் செய்த உபகாரத்துக்கு இதைப் பெற்றுக் கொள்ளுங்கள்'' என்று ஒரு நூறு ரூபாய் நோட்டை எடுத்து நண்பரிடம் கொடுத்தான் ஸேட். 'சரி, நமக்கு ஐம்பது ரூபாய் தேறும்' என்று நான் எண்ண மிட்டேன்.

ஆனால் ஸோமயாஜுலு வாங்கின சூட்டோடு அந்த நூறு ரூபாய் நோட்டைப் பல சுக்கல்களாகக் கிழித்து ஸேட்ஜியின் தலையில் போட்டார்.

ஸேட்ஜிக்கு ஒன்றும் புரியவில்லை. ஏன் எனக்குக் கூடத் தான் புரியவில்லை.

நண்பர் சொன்னார்: ''ஐயா, நீர் உம் பர்சிலுள்ள பணத்தைக்

னைக்குப் பார்ப்பதற்கு முன் வெறுமனே வாயால் வந்தனம் தெரிவித்திருந்தால் கூடச் சந்தோஷப்பட்டிருப்பேன். ஆனால் பணத்தை எண்ணி, சரியாக இருக்கிறது என்று நிச்சயம் செய்து கொண்ட பிறகு இதைக் கொடுத்தீர். நான் உம் பர்ஸைத் திறந்து பணம் ஏதாவது எடுத்துக் கொண்டு விட்டேன் என்று சந்தேகத்துடன்தானே எண்ணினீர்? நான் அப்படிப் பணத்தை எடுத்துக் கொள்பவனாக இருந்தால் உம்மிடம் ஏன் ஐயா பர்ஸைத் திருப்பிக் கொண்டு வந்து தரப் போகிறேன்? அதை யோசித்தீரா?" என்று கூறி என்னை இழுத்துக்கொண்டு நடந்தார்.

நான் ஸேட்ஜியைத் திரும்பிப் பார்த்தேன். கிழித்துப் போட்ட நூறு ரூபாய் நோட்டின் சுக்கல்களை ஒன்று விடாமல் பொறுக்கி எடுத்துக் கொண்டிருந்தான்.

அவனேதான் இவன்! நன்றாக வேண்டும். இதிலிருந்து நான் என்ன சொல்ல வருகிறேன் என்றால்......?"

"நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள் என்றால், ஸேட்ஜியின் சின்ன அறிவையும் உங்கள் நண்பர் ஸோமயாஜுலுவின் புத்தி விசாலத்தையும், உங்கள் அல்ப ஆசையின் அகலத்தையும்தான் சொல்ல வருகிறீர்கள்" என்று கூறிவிட்டு உள்ளே சென்றாள் ஹேமா.

சமையல் உள்ளிருந்து தீய்ந்து போன வாசனை கிளம்பிவந்து மூக்கைப் பிடித்தது.

நான் தினசரிப் பத்திரிகையின் மற்றப் பக்கங்களில் புகுந்து விட்டேன்.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 46. குஷ்டரோக நிவாரணம்

நோய்கள் எல்லாவற்றையுமே மருந்துகளினால் வென்று விடலாம் என்ற நம்பிக்கை எல்லோர் மனதிலும் பசுமரத்தாணி போல் பதிந்து விட்டிருக்கிறது. நோயின் அடிப்படைக் காரணம் என்ன! எதனால் அந்த நோய் வருகிறது! அது எப்படியெல்லாம் வேலை செய்யக் கூடியது! அதன் தன்மை என்ன! எந்த நிலைமையில் தற்சமயம் இருக்கிறது! என்பதற்கெல்லாம் பதில் தெரிந்து, பிறகு ஒவ்வொன்றிற்கும் பரிகாரம் தேட வேண்டும்.

நோய் வருவதற்கு அடிப்படைக் காரணம், உடல் சுகாதாரம் கெட்டுப் பலவீனமடைவதினால்தான். ஆகவே நோயாளி சுக மடைய வேண்டுமானால், இன்னமும் பலவீனமாகாமல் உடல் பலம் பெற ஒரு வழியில் சிகிச்சை அமைய வேண்டும். மற்றொரு வழியில் அதன் தன்மை, நிலைமை அறிந்து அவ்வியாதி குறைய வழி தேட வேண்டும்.

பெரு வியாதிக்காரர்களுக்கு அந்த நோய் நாளாக ஆக ஒரு பக்கம் உடலைப் பலவீனப்படுத்திக் கொண்டு, ஒரு பக்கம் நோய் அபிவிருத்தி யாகிக் கொண்டிருக்கும். இந்த நோய்க்குப் பலவித மருந்துகள் இருக்கின்றன. "சித்த வைத்தியர்கள், பெரும் நோயைத் தீர்க்கத் தங்கள் முறையைவிட சிரேஷ்டமான வைத்தியமில்லை" என்பர். "ஆயுர்வேத வைத்தியர், "எங்கள் வைத்தியம்தான் இதற்கு ஏற்றது" என்பர். "யுனானி வைத்தியம்தான் இதற்கெல்லாம் கேட்கும்" என்பார்கள் யுனானி வைத்தியர்கள். "அதெல்லாம் சரியான முறையில் செய்பவர்கள் இக்காலத்தில் இல்லை, ஸார்! ஹோமியோபதிதான் சரியானது" என்பர். ஆனால் இவ்வளவு வைத்தியங்களுக்கிடையிலும் நோயாளிகள் பெருகிக் கொண்டுதான் வருகின்றனர். ஆங்கில வைத்தியத்தைப் பற்றிச் சொல்லவே தேவையில்லை. மற்றவைகளைப் பற்றிக் கவலையே கிடையாது. அவர்கள் செய்வது சரியோ என்னவோ. அதை ஏற்றுக் கொண்டுதான் ஆகவேண்டும். வேறு விதி கிடையாது. இதுவரை எத்தனையோ வித சிகிச்சைகள் செய்தாகி விட்டன. சமீபத்தில் 'ஸல்பெட்ரான்' என்ற மருந்தைக் கண்டு பிடித்திருக்கின்றனராம். இனிமேல் இந்த வியாதியை வென்று விடலாம் என்று சொல்லுகின்றனர். அதன் குணம் இனி நடைமுறையில் பார்த்தால்தான் தெரியும்.

சாதாரணமாய் இந்த வியாதியஸ்தர்களுக்கு உபயோகிப்பதெல்லாம் நீரடிமுத்து என்ற விதையிலிருந்து தயாரித்த எண்ணெயைத்தான். பெரிய பெரிய மருந்துகள் எல்லாம் பெரிய பணக்காரர்கள் உபயோகிக்கலாம். சாதாரணமானவர்கள் உயர்ந்த மருந்துக்கு எங்கே செல்வார்கள்! அந்த எண்ணெயையே ஊசி மூலம் குத்துவர். உடலிலும் தடவுவர். சில சமயம் குடிக்கவும் கொடுப்பர். அந்த நோயாளிகளிடம் இந்த எண்ணெயின் வாசனை வீசுவதை நன்கு அறிந்து கொள்ளலாம். அந்த எண்ணெய் மிக மிகக் கசப்பானது. அதில் சருமத்திலுள்ள கிருமிகளைக் கொல்லும் சக்தி இருக்கிறது. ஏதோ ஆரம்ப நிலைமையில் உள்ளவர்கள் இதனால் குணமடையலாம். அதுவும் வெகு நீண்ட சிகிச்சை எடுத்துக் கொண்டால்தான் பலன் கிடைக்கும். அதற்குப் பல வருஷங்கள் ஆகும். வேறு வைத்திய முறைகளிலும் ஏதோ ஓரிரண்டு கேஸ்கள் குணமாகலாம். ஆனால் எல்லா முறைகளையும் அனுசரித்துப் பார்த்தும் குணமாகாதவர்கள் எத்தனையோ பேர்களுண்டு.

சித்த புருஷர்கள் தொட்ட மாத்திரத்தில் குணமாகும் விதத்தை நாம் பார்த்ததில்லை.

ஏட்டளவில் படித்திருக்கிறோம். கேட்டுமிருக்கிறோம். அப்படி இந்தக் காலத்தில் இருந்தால் மாட்டுக்கார பாபாவின் மரப் பட்டைக்குப் படை யெடுத்தாற் போல் படை யெடுத்துவிட மாட்டார்களா! ஒருக்கால் அப்படி படையெடுத்துவிட்டால் தாங்கள் மோக்ஷம் அடையும் காரியம் தடைப்படுமே என்று முற்றும் துறந்த முனிவர்கள் தங்கள் சித்தின் மகிமையை வெளிக் காட்டாமலும் இருக்கலாம். மந்திரம், மாயம், மண், மணி, விபூதி, தீர்த்தம் என்பது எல்லாம் இந்தக் காலத்தில் நடை முறையில் குணம் காண முடியவில்லை.

புனவுக்கு அடுத்து லோனெவ்லா என்ற ஊர் இருக்கிறது. அங்கு ஸ்வாமி குவலயானந்தா அவர்கள் 'கைவல்ய தாமா' என்று ஓர் ஆஸ்ரமம் நிறுவி இருக்கிறார். அவர் நன்கு படித்த பேராசிரியர். அவர் இந்த யோக ஆசனங்கள் எவ்விதம் நோய்களைத் தீர்க்கிறது என்பதை விஞ்ஞான ரூபமாய்ப் பல ஆராய்ச்சிகள் செய்து, மேல் நாட்டு விஞ்ஞானிகளும், அறிவாளிகளும் ஒப்புக் கொள்ளும் விதத்தில் பல உதாரணங்களுடன் பட விளக்கங்களுடன் பிரத்யட்சப் பிரமாணமாய் விளக்கியுள்ளார். அவர் நடத்தி வந்த ஆராய்ச்சிகளை 'யோக மிமாம்சா' என்ற ஆங்கிலப் புத்தகங்களில் விளக்கியுள்ளார்.

அதன் பைண்ட் வால்யூம்கள் பெரிய புத்தகசாலைகளில் கிடைக்கும். அவர் ஆசிரமத்தில் குஷ்டரோகிகளும் குணமடைகின்றனர். கால், கை விரல்கள் அழுகி அங்கம் தேய்ந்தவர்களும் சர்வாங்காசன சிகிச்சையினாலும், பால், பழ ஆகார நியமங்களினாலும் பூரணமாகக் குணமடைந்திருக்கின்றனர்.

என்னிடத்திலும் எத்தனையோ பேர் சர்வாங்காசனம் கற்றுப் பலன் கண்டிருக்கின்றனர். ஒரு படித்த வாலிபன் கலியாணம் செய்ய முயற்சிக்கும்போது, சில பத்துகள் உடம்பில் கண்டன. பெரும் வியாதியின் ஆரம்ப நிலை என்று அறிந்து மனம் புழுங்கினர். என்னிடம் சிகிச்சைக்காக வந்தனர். சர்வாங்காசனம் சொல்லித் தந்து, காரம், புளி இல்லாத பத்தியம் இருக்கச் சொன்னேன். ஒரு வருஷத்தில் பூரண பலன் அடைந்தார். பிறகு எல்லா விதத்திலும் சோதனை செய்து, அவ்வியாதியின் அறிகுறி சிறிதுகூட உடம்பில் இல்லையென்று தெரிந்தபின் இப்பொழுது கலியாணம் செய்துகொண்டு சுகமாய் இருக்கிறார்.

இந்த வியாதியஸ்தர்கள் செய்ய வேண்டிய முறைகள் :—சர்வாங்காசனத்தை முதல் வாரம் மூன்று நிமிஷங்கள் வீதம் மூன்று தடவைகள் செய்யவேண்டும். இடையில் இரண்டு அல்லது மூன்று நிமிஷங்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளலாம். பிறகு சாந்தி ஆசனம் ஐந்து நிமிஷம். அடுத்த வாரம் நாலு நிமிஷங்கள் வீதம் மூன்று தடவை. இவ்வாறே ஒவ்வொரு வாரத்திலும் ஒரு நிமிஷம் அதிகமாக்கி, கடைசியில் பத்து நிமிஷங்கள் வீதம் மூன்று தடவைகள் செய்ய வேண்டும். அப்படியே ஒரே தடவையில் அரை மணி நேரம் நிற்க முடிந்தாலும் நிற்கலாம். பிறகு கடைசியில் சாந்தி ஆசனம் கட்டாயம் செய்ய வேண்டும். இதைக் காலை, மாலை நேரங்களில் வெறும் வயிற்றில் செய்ய வேண்டும்.

நாடி சுத்தி காலை, மத்தியானம், மாலை மூன்று வேளைகளில் ஐந்து நிமிஷம் வீதம் செய்ய வேண்டும். காலை, மாலை ஆசனம் முடித்த பிறகு செய்யலாம். மத்தியானம் உணவுக்கு முன்பும் செய்யலாம்.

ஆகாரம், வியாதியின் நிலைமைக்குத் தக்கபடி மாறும். ஆரம்ப நிலையிலுள்ளவர்கள் காரம், புளி மட்டும் தள்ளி, பால் பழங்கள் நிறைய சேர்த்துக்கொண்டு மேற்படி ஆசனங்கள் செய்ய வேண்டும். சற்று முற்றினவர்கள் வெறும் பால், பால் சாதம், ஆப்பிள், திராக்ஷை, அத்தி, சாத்துக்குடி போன்ற பழங்களை மட்டும் எவ்வளவு அருந்த முடியுமோ அருந்தவேண்டும். நன்கு பசித்தபின் அருந்த வேண்டும். இவ்வாறு பத்தியம் கைக்கொண்டு, சர்வாங்காசனத்தைத் தீவிரமாய், விடாமல், காலை, மாலை செய்து வருவார்களானால், நோயின் நிலைமைக்குத் தக்கபடி ஒரு வருடம், இரண்டு வருடத்தில் குணமாகும். வாழ்நாள் முழுதும் நரக வேதனைப் படுவதைவிட ஒரு வருஷம் இரண்டு வருஷம் கஷ்டப்படுவது மேலல்லவா!

சர்வாங்காசனத்தால் தைராய்ட் கோளம் நன்கு போஷிக்கப் படுகிறது. பாலிலுள்ள அயோடின் சத்தும் கிடைக்கிறது. ஆகவே உடல் பலம் பெறுகிறது. இரத்தத்திலுள்ள கிருமிகள் வியாதிக் கிருமிகளைக் கொல்லும் சக்தி அடைகிறது. நாளாவட்டத்தில் அதைக் கொன்று தீர்க்கிறது. நரம்புகளுக்கு மீண்டும் தைராய்ட் ரசத்தினால் உணர்ச்சி கிடைக்கிறது. நல்ல ரத்த பாய்ச்சல் அவ்விடங்களில் வருவதால் ரணம் ஆறிப் பழையபடி நல்ல சருமத்தைச் சிருஷ்டிக்கிறது.

குஷ்டரோக சானிடோரியத்தில் ஒரு முக்கிய உத்தியோகம் வகிக்கும் நண்பர் எனக்குத் தெரிந்தவர். அவரிடம் யோக ஆசன மகிமையைப் பல தடவை சொல்லியிருக்கிறேன். கடைசியில் குஷ்டரோகிகள் சிலரைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு மருந்து சிகிச்சையுடன் ஆசனங்களும் செய்விக்கிறார்களாம். இதை அந்நண்பர் எனக்குத் தெரிவித்தார். எனக்கு மிகுந்த சந்தோஷம் மேற்பட்டது. அதைத் தெரிவித்துக் கொண்டேன்." நீங்கள் இதற்காகச் சந்தோஷப்பட்டு விடாதீர்கள். வியாதி குணமானாலும் டாக்டர்கள் தங்கள் மருந்தின் சிகிச்சையினால்தான் குணமடைந்தது என்று தீர்ப்பளிப்பார்கள். ஆசனத்தில் எல்லாம் அவர்களுக்கு நம்பிக்கை கிடையாது. ஆகையால் நான் சில குஷ்டரோகிகளை அனுப்புகிறேன். நீங்கள் அவருக்கு ஆசனங்களைச் சொல்லித் தந்து குணப்படுத்திக் காட்டுங்கள். பிறகு இந்த சிகிச்சையைப் பற்றி நாம் அரசாங்கத்திடமே பேசுவோம்" என்றார்.

சந்தேகமே வேண்டாம். லோனெவ்லாவில் கைவல்யதாமா ஆஸ்ரமத்திற்குச் சென்று பார்த்தால் உண்மை தெரிந்து விடுகிறது. இப்பொழுது முதன் முதலாக நமது சுதந்திர பாரதத்தில் இதற்கென்றே ஒரு யோக கலாசாலை ஒன்றைப் புனவில் திறந்திருக்கின்றனர். ஸ்வாமி ஸ்ரீ குவலயானந்தா அவர்கள்தான் அதற்குத் தலைவராக இருக்கிறார். இனி நமது நாட்டுக்கு யோகம் தான். (தொடரும்)

# நம்பிக்கை

அக்ஷயம்

'சுயராஜ்யா' என்ற தினசரிப் பத்திரிகையின் ஆசிரியர் தன் அறையில் உட்கார்ந்து அன்று வந்த கடிதங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். அச்சமயம் ஆபீஸ் பியூன் உள்ளே நுழைந்து அவர் கையில் ஒரு சீட்டைக் கொடுத்தான். அதைப் பார்த்ததும் அவர், "உடனே அவரை அழைத்து வா!" என்று உத்தரவிட்டார்.

பியூன் போன சிறிது நேரத்துக்கெல்லாம் கதர் ஆடை அணிந்த வாலிபன் ஒருவன் உள்ளே நுழைந்து கைகூப்பி அவருக்கு வணக்கம் தெரிவித்தான்.

"வாருங்கள், மூர்த்தி! உட்காருங்கள். எப்பொழுது வந்தீர்கள்!" என்று ஆசிரியர் இன்முகத்துடன் அவனை வரவேற்று ஆசனமொன்றில் அமரச் சொன்னார்.

வாலிபன் நாற்காலியில் உட்கார்ந்தவாறே, "நேற்றுச் சாயந்திரமே வந்து விட்டேன்" என்று பதில் அளித்தான்.

"அப்படியா! எங்கே தங்கியிருக்கிறீர்கள்!" என்று வியப்புடன் கேட்டார் ஆசிரியர்.

"ஒரு ஹோட்டலில்!"

"ஹோட்டலில் போய்த் தங்குவானேன்! இங்கேயே வந்து விடக் கூடாதோ!"

"நான் வரும்பொழுது நேரம் ஆகிவிட்டது. ஒரு வேளை ஆபீஸ் மூடியிருக்கலாமோ என்று......"

"மூடியிருந்தால் என்ன! நீங்கள் வந்திருந்தால் நாங்கள் திறந்து விடமாட்டோமா!"

"அதற்கில்லை. அவேளையில் வந்து உங்களுக்குச் சிரமம் கொடுப்பானேன் என்று..."

"இதில் என்ன சிரமம்!—சரி இன்று இங்கேயே வந்து விடுங்கள். இரண்டு அறைகள் காலியாகத்தான் இருக்கின்றன. எதில் பிரியமோ, அதில் தங்கலாம்!"

"நல்லது!"

"சாமான்களை எப்பொழுது கொண்டு வருகிறீர்கள்!"

"இன்று சாயந்திரமே கொண்டு வந்து விடுகிறேன். ஆமாம், தாங்கள் எங்கே தங்கியிருக்கிறீர்கள்!"

"நான் இங்கிருந்து கூப்பிடு தூரத்தில்தான் இருக்கிறேன்."

"அப்படியா! ரொம்ப சௌகரியமாகப் போச்சு! அடிக்கடி சந்தித்துப் பேசச் சௌகரியமாயிருக்கும் அல்லவா!"

"தாராளமாக எப்பொழுது வேண்டுமானாலும் சந்திக்கலாம். சரி, வேறு ஏதாவது விசேஷம் உண்டா!"

"ஒன்றுமில்லை. நாளைக்கே வேலையை ஒப்புக் கொள்ளலாம் என்றிருக்கிறேன்."

"உங்களுக்கு எப்பொழுது சௌகரியமோ, அப்பொழுது ஒப்புக் கொள்ளுங்கள். எனக்கு அதைப்பற்றி எவ்விதமான ஆட்சேபணையும் இல்லை. வந்த சிரமத்துக்கு இரண்டொரு நாள் சிரமப் பரிகாரம் வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள்!"

"சிரமப்பரிகாரம் என்ன வேண்டிக் கிடக்கிறது! வேலையில்லாமல் என்னால் ஒரு நிமிஷம்கூட உட்கார்ந்திருக்க முடிவதில்லை."

"சரி, உங்கள் இஷ்டம். எப்பொழுது வேண்டுமானாலும் நீங்கள் வேலையை ஒப்புக் கொள்ளுங்கள்!"

"நாளைக்கே வந்து ஒப்புக் கொள்கிறேன். நான் போய் வரட்டுமா!"

"ரொம்ப சந்தோஷம்!"

★

மூர்த்தி அன்று மாலையிலேயே ஸி. ஐ. டி. இன்ஸ்பெக்டரைப் பார்க்கச் சென்றான். இன்ஸ்பெக்டர் அவனைப் பார்த்ததும் தனிமையில் அழைத்துச் சென்று, "நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்!" என்று கேட்டார்.

"நான் நேற்றைக்கே வந்து விட்டேன்!"

"நான் எழுதிய கடிதம் உங்கள் கைக்குக் கிடைத்ததோ, இல்லையோ!"

"கிடைத்தது. அதைப் பார்த்தபின் தானே நான் இங்கே வரத் தீர்மானித்தேன்!"

"இங்கே என்ன செய்ய வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியும் அல்லவா!"

"ஓ! இங்கே வந்ததும் என் வேலையை ஆரம்பித்து விட்டேனே!"

"எங்கே!"

"'சுயராஜ்யா' பத்திரிகையில் உதவி ஆசிரியராக அமர்ந்து விட்டேன்."

"பேஷ்! நல்ல காரியம் செய்தீர்கள்! அப்படியானால் நம் காரியம் வெகு சுலபமாக முடிந்து விடும் என்று சொல்லுங்கள்!"

"அதற்கு என்ன சந்தேகம்!"

"நீங்கள் செய்ய வேண்டிய முதல் காரியம் என்ன தெரியும் அல்லவா! ஆசிரியரின் போக்கைக் கவனித்துக் கொள்ள வேண்டும். ஆசிரியரின் அபிப்பிராயங்கள் எப்படிப்பட்டவை! அவர் எத்தகைய மனிதர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறார்! என்ன என்ன விஷயங்கள் சம்பந்தமாக யார் யாருடன் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டிருக்கிறார்! எங்கேயாவது வெளியூர்களுக்குப் போய் வருகிறாரா! அப்படியானால் எந்த எந்த ஊர்களுக்கு!—இது போன்ற விஷயங்களை அறிந்து எனக்கோ என் உதவியாளர்களுக்கோ தெரியப்படுத்துங்கள். இந்த இலாக்காவில் வேலை செய்பவர்களுக்குச் சமயோசிதமாக நடந்து கொள்ளத் தெரிய வேண்டும். இது மிக மிக முக்கியம்."

"ரொம்ப சரி!"

"இன்னொரு விஷயமும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் உங்கள் ஆப்த நண்பர்களிடம் கூட ரகசியத்தை வெளியிடக் கூடாது. ஸி. ஐ. டிகளுக்கு முதல் பாடம்



"மாமா! புதுசா நீங்கள் அக ராதி வாங்கி யிருக்கிறீர்களாமே? அதை அப்பா வாங்கிக் கொண்டு வரச் சொன்னார்!"

"இப்பொழுதுதான் பாதி படித் துக் கொண்டிருக்கிறேன். முழுவ தும் படித்து முடிந்தவுடன் அனுப்பு கிறேன் என்று சொல்லு!"

இதுதான். தன் மேலதிகாரிகளுக்கும் தன் வேலையுடன் சம்பந்தப்பட்டவர்களுக்கும் மட்டுமேதான் சொல்லலாம். புரிந்ததா!"

"இது எனக்குத் தெரியாதா!"

"உங்களுக்குத் தெரியாது என்பதற்காக நான் சொல்ல வரவில்லை. தெரிந்தும் தெரியாதவர்களாக எத்தனையோ பேர் நடந்து கொண்டு விடுகிறார்கள். சிலர் தம்மை ஸி. ஐ. டி. என்று சொல்லிக் கொள்வதில் பெருமை என்று எண்ணிப் பெரிய முட்டாள்தனம் செய்து விடுகிறார்கள். இந்த விஷயத்தில் உங்கள் உண்மை அபிப்பிராயமும் நடவடிக்கைகளும் தெரியாமல் இருந்தால்தான் வெற்றி கிட்டும். அதற்காகத் தான் சொன்னேன்."

"நீங்கள் சொல்கிறபடி நான் நடந்து கொள்கிறேன். கவலைப்படாதீர்கள்."

"சந்தேகாஸ்பதமான நபராகத் தோன்றினாலும், சந்தேகாஸ்பதமான கடிதங்கள் வந்தாலும் எனக்குத் தெரியப்படுத்துங்கள்!"

"சரி!" என்று சொல்லிவிட்டு மூர்த்தி எழுந்திருந்தான்.

"இந்த ஊரில் உங்கள் உதவிக்கு வேறு யாரும் கிடையாது என்பதை நீங்கள் அறிந்திருப்பீர்கள் என்றே எண்ணுகிறேன். நான் தான் உங்களுக்கு மேலதிகாரி. ஆகவே......" என்று இன்ஸ்பெக்டர் ஆரம்பித்தார்.

"இந்த ஊரில் வேறு ஸி. ஐ. டி........."

மூர்த்தி ஆரம்பித்த வாக்கியத்தை முடிக்கு முன்னரே, "இவ்வூரில் உள்ள ஸி. ஐ. டிக்கும் உங்களுக்கும் ஒருவிதமான சம்பந்தமும் கிடையாது. நீங்கள் அவர்களை அறிமுகப் படுத்திக் கொள்ள வேண்டிய அவசியமும் இல்லை. நான் தான் உங்களுக்கு மேலதிகாரி. எனக்கும் உங்களுக்கும்தான் விஷயம் தெரியலாமே ஒழிய மற்றவர்களுக்குத் தெரியக் கூடாது. தெரிந்ததா!" என்றார் இன்ஸ்பெக்டர்.

"தெரிந்தது. உங்களைத் தவிர வேறு எவருக்கும் நான் யார் என்றோ, என் அபிப்பிராயம் என்னவென்றோ தெரியாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அவ்வளவு தானே!"

"ஆமாம். உங்கள் வேலையை இனிமேல் நீங்கள் ஆரம்பிக்கலாம்."

★

மூர்த்தி 'சுயராஜ்யா' பத்திரிகையில் வேலைக்கு வந்து கிட்டத்தட்ட மூன்று மாதங்கள் ஆகி விட்டன. ஆசிரியர் மூர்த்தியிடம் வெகு பட்சமாக நடந்து கொண்டார். மாலை வேளைகளில் வீட்டுக்குப் போகும்பொழுது ஆசிரியர் மூர்த்தியைத் தம் வீட்டுக்கு அழைத்துப் போய் லோகாபிராமமாகப் பேசிக் கொண்டிருப்பது உண்டு. சிற்சில நாட்களில் மூர்த்தி அவருடைய வீட்டிலேயே சாப்பிடுவதும் உண்டு. ஆசிரியரின் இரண்டு குழந்தைகளும் அவனைக் கண்டுவிட்டால் சூழ்ந்து கொண்டு கொட்டம் அடிக்கத் தொடங்கிவிடும்.

அன்றொருநாள் இரவு எட்டு மணி சுமாருக்கு மூர்த்தி ஆசிரியரின் வீட்டுக்குப் போயிருந்தான். அப்பொழுது ஆசிரியரின் ஐந்து வயதுப் பெண் சாந்தி அவருடைய அறையில் உட்கார்ந்து தன் பொம்மைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தாள்.

"சாந்தி! என்ன செய்கிறாய்!" என்று கேட்டுக் கொண்டே மூர்த்தி உள்ளே நுழைந்தான்.

அவன் குரலைக் கேட்டதும் சாந்தி பொம்மைகளை அப்படியே கீழே போட்டுவிட்டு, ஓடி வந்து, "மாமா, மாமா!" என்று அவன் கால்களைக் கட்டிக் கொண்டாள். மூர்த்தி அவளை மடியில் தூக்கி வைத்துக் கொண்டு, "நீ சாப்பிட்டு விட்டாயோ!" என்று கேட்டான்.

'ஓ! சாப்பிட்டு விட்டேனே!"

"அப்பா என்ன செய்து கொண்டிருக்கிறார்!"

"குளித்துக் கொண்டிருக்கிறார்!"

மூர்த்தி அவள் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வாசற்புறத்து ஹாலுக்கு வந்தான். அங்கே நாலைந்து நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. மூர்த்தி அந்த நாற்காலிகளில் ஒன்றில் உட்கார்ந்து கொண்டான். சாந்தி சிறிது நேரம் அவனுடன் பேசிக் கொண்டிருந்தாள். பிறகு உள்ளே சென்று விட்டாள். அவள் உள்ளே சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் ஆசிரியர் வெளியே வந்தார். மூர்த்தியைப் பார்த்ததும் அவர், "வாருங்கள்! என்ன சமாசாரம்!" என்று விசாரித்தார்.

"ஒன்றுமில்லை. பொழுது போகவில்லை. உங்களைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்!" என்றான் மூர்த்தி.

"சாப்பிட்டு விட்டீர்களோ!"

"சாப்பிட்டு விட்டேன்!"

"சாப்பிடவில்லை என்றால் இங்கேயே சாப்பிடலாம்."

"இல்லை; சாப்பிட்டு விட்டுத்தான் வந்தேன்."

"அப்படியானால் சற்று உட்கார்ந்திருங்கள். நான் சாப்பிட்டுவிட்டு வந்துவிடுகிறேன்!"

"அவசரம் ஒன்றுமில்லை. நீங்கள் போய்ச் சாப்பிட்டுவிட்டு மெதுவாக வாருங்கள்!"

ஆசிரியர் உள்ளே போய்விட்டார். சாப்பாட்டை முடித்துக்கொண்டு அவர் திரும்பி

வர இருபது நிமிஷ நேரம் பிடித்தது. அவர் வெற்றிலைத் தட்டுடன் அங்கே வந்து ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். பிறகு வெற்றிலை போட்டவாறே, "இன்று சாயந்திரத் தபாலில் ஒரு கடிதம் வந்தது. இரண்டொரு நாட்கள் நான் வெளியூருக்குப் போக வேண்டியிருக்கும் போலிருக்கிறது" என்றார்.

ஏதோ யோசனையில் உட்கார்ந்திருந்த மூர்த்தி ஆசிரியரின் வார்த்தைகளைக் கேட்டதும் ஆவலுடன், "எந்த ஊருக்குப் போகப் போகிறீர்களோ!" என்று கேட்டான்.

"மதுரைக்கு!"

"ஏதாவது வேலையோ!"

"ஆமாம். என் பந்து ஒருவர் வீட்டில் கல்யாணம்."

"அப்படியா! குடும்பத்துடன் போகப் போகிறீர்களோ!"

"இல்லை, இல்லை! இந்தக் காலத்தில் குடும்பத்தோடு எங்கே போவது! நான் மட்டுந்தான் போகப் போகிறேன்."

"நல்லது. போய் வாருங்கள்!"

"தலையங்கம், குறிப்புகள் — இவற்றை யெல்லாம் நீங்கள்தான் எழுத வேண்டும்."

"அதற்கென்ன! எழுதி விடுகிறேன்!"

"பாக்கி விஷயங்களை யெல்லாம் மற்ற உதவி ஆசிரியர்கள் கவனித்துக்கொள்ளட்டும்."

"நீங்கள் கவலைப் படாதீர்கள். நான் எல்லாவற்றையும் கவனித்துக் கொள்கிறேன்."

"நான் திரும்பி வருவதற்கு நான்கு நாட்கள் பிடிக்கும். நாளைக்குத் தலையங்கம் நான் எழுதித் தந்துவிட்டுப் போகிறேன். முடிந்தால் குறிப்புகளும் தந்து விடுகிறேன். பாக்கி மூன்று நாட்களுக்கும் நீங்கள்தான் கவனித்துக் கொள்ள வேண்டும்."

"அதற்கென்ன! குறிப்புகளைப் பற்றிக் கவலையில்லை. தலையங்கம் மூன்று நாட்கள் தானே! எப்படியாவது ஒப்பேற்றி விடுகிறேன். ஆனால் தலையங்கம் நீங்கள் எழுதுவதைப்போல் அவ்வளவு நன்றாயிராதோ, என்னவோ!"

"இல்லை, இல்லை. நீங்களும்தான் நன்றாக எழுதுகிறீர்களே! இதுவரை இரண்டொரு தடவை நீங்களும்தான் எழுதி யிருக்கிறீர்களே! நன்றாகத்தானே இருந்தது!"

"என்ன இருந்தாலும் எனக்கு அனுபவம் பற்றாது. உங்களிடம் இருந்து பயிற்சி பெற்றால் இன்னும் கொஞ்ச நாட்களில் சரியாகி விடும்.—அதிருக்கட்டும். எந்த வண்டிக்குப் போகப் போகிறீர்கள்!"

"ராத்திரி பத்து மணி வண்டிக்குத்தான்!"

"மதுரையில் உங்கள் பந்து எங்கே இருக்கிறார்!"

"மேல மாசி வீதியில். ஏன்! எதற்காகக் கேட்கிறீர்கள்!"

"இல்லை, நானும் கொஞ்ச நாள் மதுரையில் இருந்திருக்கிறேன். ஒருவேளை அவரைத் தெரிந்திருக்கலாமோ என்றுதான் எண்ணிக் கேட்டேன்."

"அவர் அப்படி ஒன்றும் பெரிய மனிதர் இல்லை. சாதாரண மனிதர்தான். ஜவுளிக் கடை வைத்திருக்கிறார்."

"அப்படியா! எனக்கு அங்கே எத்தனையோ ஜவுளிக் கடைக்காரர்களைத் தெரியும். அவருடைய பெயர் என்னவோ!"

ஆசிரியர் தம் பந்துவின் பெயரைச் சொன்னார். மூர்த்தி சிறிது நேரம் யோசித்துவிட்டு, "எனக்குத் தெரியவில்லை!" என்றான்.

சிறிது நேரம் இருவரும் லோகாபிராமமாகப் பேசிக் கொண்டிருந்தனர். பிறகு மூர்த்தி, "நான் வருகிறேன்!" என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டு எழுந்தான்.

"சரி, நானும் போய்ப் படுக்கிறேன்" என்று சொல்லி ஆசிரியரும் எழுந்தார்.

★

அங்கிருந்து மூர்த்தி நேரே துப்பறியும் இலாக்காவுக்குச் சென்றான். அவனைப் பார்த்ததும் இன்ஸ்பெக்டர், "என்ன சேதி!" என்று விசாரித்தார்.

"நாளை இரவு பத்து மணி வண்டிக்கு ஆசிரியர் மதுரைக்குப் போகிறார்!" என்றான் மூர்த்தி.

"என்ன வேலையோ!"

"ஏதோ கல்யாணமாம். போகப் போகிறாராம்!"

"எங்கே தங்கப் போகிறாராம்!"

மூர்த்தி முழு விலாசத்தையும் கொடுத்தான்.

இன்ஸ்பெக்டர் சிறிது நேரம்வரை ஏதோ யோசித்துக் கொண்டிருந்தார். பிறகு "நீங்கள் வந்து மூன்று மாதங்களுக்கு மேல் ஆகப்போகிறது. ஆனால் ஒரு முக்கியமான வேலையும் இது வரை செய்ததாகத் தெரியவில்லையே!" என்றார்.

"ஏதாவது துப்புத் தெரிந்தால் உடனே சொல்லி விடமாட்டேனா!"

"இவ்வளவு நாட்களும் ஏதாவது நடக்காமலா இருக்கும்! உங்கள் திறமையைத்தான் சந்தேகிக்க வேண்டி யிருக்கிறது."

"அதெப்படி! இரவு பகலாக நான் ஆபீஸிலேயேதானே இருக்கிறேன்! ஒவ்வொரு ஆசாமியையும் கண் குத்திப் பாம்பாகக் கவனித்து வருகிறேன். ஆபீஸ் கடிதங்கள் அத்தனையையும் நான்தான் பார்க்கிறேன். ஆசிரியரின் பிரைவேட் தபால்களை மட்டும்தான் என்னால் பார்க்க முடிவதில்லை!"

"அதுதானே முக்கியம்!"—ஓங்கி மேஜை மீது ஒரு குத்துக் குத்தியவாறே சொன்னார் இன்ஸ்பெக்டர்.

"அவர் கடிதங்களை எப்படி ஸார் பார்க்க முடியும்!"

"அதைத்தானே பார்க்கவேண்டும்! ஆபீஸ் கடிதங்களில் என்ன வைத்திருக்கிறது!"

"சரி, முயற்சித்துப் பார்க்கிறேன்."

"நீங்கள் நிறைய வேலை செய்தால்தானே ஸார், பிரயோஜனம் கிடைக்கும். இன்னும் மூன்று மாதங்கள் அவகாசம் தருகிறேன். அதற்குள் நீங்கள் ஒன்றும் செய்யவில்லை என்றால் எங்கள் இலாக்கா உங்களுக்குத் தண்டச் சம்பளம் கொடுத்து கஷ்டப்படுவதற்கில்லை."

"என்னால் ஆனதைச் செய்ய முயற்சிக்கிறேன், ஸார்!"

"சரி, நான் சொல்லவேண்டியதைச் சொல்லி விட்டேன். போய் வாருங்கள்!"

★

ஆசிரியர் மதுரைக்குப் புறப்பட்டுச் சென்ற மூன்றாம் நாள் மூர்த்தி மறுபடியும் இன்ஸ்பெக்

டரைப் பார்க்கச் சென்றான். இன்ஸ்பெக்டர் அவனைப் பார்த்ததும், "ஏதாவது விசேஷம் உண்டா!" என்று கேட்டார்.

மூர்த்தி 'சுயராஜ்யா' பத்திரிகையின் அன்றைய இதழை அவர் மேஜைமீது வைத்து, "இந்தத் தலையங்கத்தைப் படித்துப் பாருங்கள்!" என்றான்.

இன்ஸ்பெக்டர் உடனே அதை எடுத்துப் படித்துப் பார்த்து விட்டு, "கட்டுரை ரொம்பக் காரசாரமாக இருக்கிறதே! ஆசிரியர் வகையாக மாட்டிக் கொண்டு விடுவார் போலிருக்கிறதே!" என்றார்.

"அதற்காகத்தானே எழுதினேன்!"

"யார், நீங்களா!"

"ஆமாம்!"

"அடே!"

"அன்றைக்கு ஏதாவது வேலை செய்து காட்டு என்று சொன்னீர்களே! உடனடியாகத் தோன்றியது இதுதான். ஆசிரியர் ஊரில் இல்லை. நான்தான் தலையங்கம் எழுதுகிறேன். காற்றுள்ள போதே தூற்றிக்கொள்ள வேண்டும் அல்லவா!"

"அது சரி; இதனால் என்ன பலன்!" என்று இளக்காரமாகக் கேட்டார் இன்ஸ்பெக்டர்.

தன் கெட்டிக்காரத் தனத்தை இன்ஸ்பெக்டர் மெச்சுவார் என்று மூர்த்தி எண்ணியிருந்தான். ஆனால் இன்ஸ்பெக்டர் இம்மாதிரிக் கேட்டுவிடவே அவன் முகம் நன்றாக வாடி விட்டது. மிகுந்த தயக்கத்துடன், "பலனா!" என்று இழுத்தான்.

"ஆமாம், இதற்காக ஆசிரியர் இரண்டொரு வருஷம் சிறைத் தண்டனை அடைவார். அவ்வளவுதானே!"

"இதை விட நமக்கு வேறு என்ன வேண்டும்!"

"ஆசிரியர் சிறைக்குப் போவதால் மட்டும் நம் காரியம் முடிந்து விடாது. அவருடைய தோழர்களை—அரசாங்கத்துக்கு எதிராகப் பிரசாரம் செய்து வரும் அவர்களுடைய தோழர்களைத் தெரிந்து கொள்ள வேண்டும். அப்பொழுதுதானே அவர்களை நசுக்குவதற்கு நமக்கு வகை ஏற்படும்!"

மூர்த்தி தொங்கிய முகத்துடன் இன்ஸ்பெக்டரைப் பார்த்தான்.

"நான் சொல்வதன் கருத்துப் புரிந்ததா!" என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

'உம்' கொட்டி விட்டு மூர்த்தி வறண்ட தன் உதடுகளில் நாவைத் துழாவினான்.

சிறிது நேரம் இன்ஸ்பெக்டர் ஏதோ யோசித்து விட்டு, "ஏதோ நடந்தது நடந்து விட்டது. உங்களுக்குத்தான் வேண்டிய அவகாசம் கிடைக்கிறதே! இந்தக் கட்டுரைக்காக ஆசிரியருக்குத் தண்டனை கிடைக்கக் குறைந்தது இன்னும் நான்கைந்து மாதங்களாவது பிடிக்கும். ஆகையினால் நீங்கள் உங்கள் காரியத்தைத் தளராமல் நடத்துங்கள்!" என்றார்.

மூர்த்திக்குப் போன உயிர் திரும்பி வந்தாற் போலிருந்தது. அவன் பல்லைக் காட்டிக் கொண்டு, "ஆமாம், ஆமாம். இன்னும் வேண்டிய அவகாசம் இருக்கிறது!" என்றான்.

(அடுத்த இதழில் முடியும்)

# வட்ட மேஜை

கடந்த ஜூன் 17-ம் தேதி வெளியான "கல்கி" இதழில் 'ரஜனி'யின் இலங்கைக் கடிதத்தைப் படித்தேன். அதில் கண்ட விவரங்களில் சில முக்கிய தவறுகள் இருக்கின்றன. தவறு ஏற்படுவது சகஜம். ஆனால் அதை உடனடியாகத் திருத்துவது பெருந் தன்மை.

நம் பரத கண்டத்தின் மக்கள் லட்சக்கணக்கில் இந்நாட்டில் குடியேறி யிருக்கிறார்கள். இவர்கள் யாவரும் பிரஜா உரிமைச் சட்டம் அமுலுக்கு வந்தவுடன், தங்களைப் பதிவு செய்ய முன் வந்திருந்தால், நிலைமை இவ்வளவு சீர்கேடான நிலைக்கு வந்திருக்காது. வீணாக 'பகிஷ்கார' இயக்கத்தைத் துவக்கி, அரசாங்கத்தின் மனஸ்தாபத்திற்கு உள்ளாகி, அநியாயமாக காலதாமதமேற்பட காங்கிரஸ் நிர்வாகிகள் ஓரளவு பொறுப்பாளி யாவார்கள்.

நிற்க. கமிஷனர் நிராகரிக்கும் மனுக்களை சுப்ரீம் கோர்ட்டுக்கு முதன் முறையாக காங்கிரஸ் கொண்டு போகவில்லை. இந்தப் பரீட்சார்த்த வழக்கில் சம்பந்தப்பட்ட மனுதாரர்கள் இருவரும் முஸ்லீம்கள். அவர்கள் பெயர் முறையே முகம்மது அப்துல் காதர் பதுருதீனும், முகம்மது முகதீன் அப்துல் காதரும் ஆவார்கள். இவர்கள் மனுக்கள் முதலில் கமிஷனரால் நிராகரிக்கப்பட்டு, பிறகு சுப்ரீம் கோர்ட்டில் மகத்தான வெற்றி அடைந்தார்கள். இவ் வழக்கைச் சாதுர்யமாக வாதாடி வெற்றியைப் பெற்றுக் கொடுத்தவர்கள் கொழும்பு பிரபல வழக்கறிஞர் திரு என். கே. சாக்ஸி அவர்களும் அட்வகேட் திரு கே. சண்முக நாயகம் அவர்களும், பிராக்டர் திரு எஸ். ஹரிஹர அய்யரும் ஆவார்கள். இம் மூவரும், பிரதிபலத்தைப் பாராமல் உழைத்தவர்கள்.

மேற்படி வழக்கை இலங்கை சர்க்கார் பிரிவி கவுன்ஸிலுக்கு அப்பீல் செய்திருக்கிறார்கள். பொது மக்களின் ஆதரவால் இவ் வழக்கைப் பிரிவி கவுன்ஸிலிலும் மனுதாரர்கள் சார்பில் வாதாடத் தகுந்த ஒழுங்குகள் செய்யப்பட்டு வருகின்றன. சர்க்கார் தரப்பில் சர் வால்டர் மாங்கடான் கே. ஸி. அவர்களும், திரு ஆர். கே. ஹாண்டு அவர்களும், மனுதாரர்களின் தரப்பில் திரு டி. என். பிரிட்ட கே. ஸி. அவர்களும், ஸி. என். சாப்மான் அவர்களும் வழக்காடப் போவதாகத் தெரிய வருகிறது. இதையொட்டி மனுதாரர்கள் சார்பில் நியமிக்கப்பட்டிருக்கும் வழக்கறிஞர்களுக்குப் போதிய தகவல் அளிக்க பிராக்டர் திரு எஸ். ஹரிஹர அய்யர் கூடிய விரைவில் இங்கிலாந்துக்குப் பிரயாணமாவார்கள். இவ் வழக்கு சம்பந்தமாகக் காங்கிரஸ் ஸ்தாபனம் எவ்விதமான உதவியும் அளிக்க முன்வரவில்லை.

கொழும்பு
31—7—51

எச். கமலா

தென்னிந்தியாவில் கோயமுத்தூருக்கு அருகில்
தயாரிக்கப்படும்

டிடான் ப்ராக்கு **TITAN** உயர்தரமான

# பெய்ண்டு, வார்னிஷ் ரகங்கள்

Ready mixed paints:—சீக்கிரமாக உலரக்கூடிய கட்டித் தட்டாத பெய்ண்டுகள் 25 பிரகாசமான வர்ணங்களில் தயாரிக்கப் படுகின்றன.

Stiff Paint No. 950:—இந்த வெள்ளை நிறம் கெட்டி பெய்ண்டு மிகவும் சிறந்த வெளுப்புக் கொடுக்கும்.

Synthetic Varnish:—இந்த உயர்தரமான வார்னிஷ் ரோஜனம் சேராதது. தண்ணீரால் கெடாத வார்னிஷ்.

Copal Varnish:—சீக்கிரத்தில் உலர்ந்து வெகு பளபளப்பாக இருக்கும். விலை வெகு குறைவானது.

விலை விவரங்கள், ஷேட் கார்டு வேண்டியவர்கள் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்:

## TITAN PAINT & VARNISH CO., LTD.

PODANUR (near Coimbatore) Telegrams: "TITAN"



## டாக்டர்கள் நிரூபிக்கின்றனர் நீங்களும்

## அழகிய சருமத்தை 14 நாட்களில் அடையலாமென்று!

### டாக்டர்கள் நிரூபிக்கும் உபாயம்

இதுதான்: பாமோலிவ் சோப்பால் உங்கள் முகத்தைக் கழுவுங்கள். பிறகு பாமோலிவ்வின் மிருதுவான இன்ப சுகந்தரும் நுரையால் உங்கள் சுத்தமான முகத்தை 60 வினாடிகள் தேயுங்கள். அலம்புங்கள்! ஒரு நாளைக்கு மூன்று வேளைகள் வீதம் 14 நாட்கள் இவ்வாறு செய்யுங்கள். இவ்விதசுத்தி செய்யும் தேய்ப்பு உங்கள் சருமத்தை மிருதுவான வழவழப்பான, இளமையான தோற்றமளிக்கச் செய்கிறது.

நீங்களும் 14 நாட்களிலேயே இத்தகைய பலன்களை எதிர்பார்க்கலாம்.
பிரகாசமுள்ள அதிகச் சுத்தமான சருமம் ★ உயர்ந்த ரகம் ★ நல்லிசை ★ மிகவும் குறைந்த மாசுமறுக்கள் ★ குறைந்த நெய்ப்பு ★ வழவழவென்றிருக்கும் சருமம் ★ மிகப் புதிய நிறம் ★

சோப்பு மட்டுமில்லை — ஓர் அழகு சாதனம்!









★ ★ ★ ★ [அகில உலகச் சிறுகதைப் போட்டிக்காக "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை நடத்திய அகில இந்தியச் சிறுகதைப் போட்டிக்கு அனுப்பப்பட்ட தமிழ்க் கதை—2] ★ ★ ★ ★

என் கணவர் வருகையை மிக்க ஆவலுடனும் கவலையுடனும்தான் எதிர் நோக்கிக் கொண்டிருந்தேன். சென்ற இரண்டு நாட்களாக அவர் மாலையில் வீட்டுக்கு வரும் பொழுது தம் நண்பரையும் அழைத்து வந்து கொண்டிருந்தார். இன்றும் வீடு திரும்பும் பொழுது நண்பருடனேதான் வருவாரோ என்ற கவலை எனக்கு. தினமும் அந்த நண்பரை வீட்டுக்கு அழைத்து வராவிட்டால் என்ன மோசம் வந்து விடுமோ இவருக்கு!

கணவரிடம் என் எண்ணத்தை வெளியிட வேண்டும்-என்றுதான் தினமும் பிரயத்தனப்படுகிறேன், முடியவில்லை. அந்த நண்பர் சேஷன்மீது எனக்குள்ள அந்த இனம் புரியாத அதிருப்தியைப் புலப்படுத்திக் கூற, எனக்குத் தெரியவில்லை. அரை குறையாகக் காரணம் குறிப்பிடாமல் அந்த நண்பரைப் பற்றி இவரிடம் நான் என்ன சொல்ல முடியும்!

ஆகக்கூடி, சேஷனின் மனைவி சீதா பிறந்தகம் போனது முதல்தான் எனக்கு இத்தகைய அதிருப்தி ஏற்பட்டிருந்தது. அவள் இருந்த பொழுது அவர்கள் இருவரும் ஜோடியாக எங்கள் வீட்டுக்கு வருவார்கள். நாங்களிருவரும்கூட அவர்கள் வீட்டுக்குப் போய் வருவோம். நால்வரும் சேர்ந்து நாங்கள் வார இறுதியில் எட்டு மைல் தொலைவிலிருக்கும் பட்டணம் சென்று வந்ததும் உண்டு. 'மெரீனு' கடற்கரையின் அழகையும், கடை, காட்சிகள் ஆகியவற்றின் கீர்த்தியையும், ஓட்டல் சிற்றுண்டிகளின் ருசியையும் நாங்கள் நால்வருமாக அனுபவித்து மகிழ்ந்த நாட்கள் பல.

சீதா இருந்தவரையில் அந்தத் தம்பதிகளிருவர்பால் ஏற்பட்ட தோழமை எனக்கு உவகையளிப்பதாகவே இருந்தது. இரண்டு மாதங்களுக்கு முன்புதான் சீதா, பிள்ளைப்பேறுக்காக பிறந்தகம் போய் விட்டாள். அதற்குப் பிறகுதான் சேஷன் தனியாக எங்கள் வீட்டுக்கு வருவது அதிகமாயிற்று. அவர் வருகை குறையக் கூடாதா என்று என் அந்தரங்கம் விரும்பியது.

இந்த எண்ணத்தைத் துண்டித்து விடவே முயன்றேன்.

'வீட்டிலே மனைவி இல்லை. அதனால் இங்கே என் கணவரோடு பொழுதைப் போக்க வருகிறார்! நியாயந்தானே! நமக்கேன் ஒருவர்பால் காரணமற்ற வெறுப்பு!' என்று என் மனத்தைத் துவக்கத்திலேயே கடிந்தேன். இருந்தாலும் மனம் கேட்கவில்லை.

என் மனநிலை இவ்வாறிருக்க, என் கணவரோ சேஷனை ஞாயிறு தோறும் பகல் போஜனம் எங்களுடனேயே சாப்பிடவும், மாலை பட்டணப் பயணத்திலே எங்கள் இருவருடனே சேர்ந்து கொள்ளவும் சொல்லி விடுவார்! இந்த அழைப்பைச் சேஷன் சற்றும் இங்கிதம் தெரியாமல் ஏற்றுக்கொண்டு வீட்டுக்கு வந்து விடுவார்.

இது எனக்குக் கட்டோடு பிடிக்கவேயில்லை. ஆம். எங்கள் இருவரிடையே அவர் எதற்கு!

மனிதர்களின் இயல்பை என்னைவிட என் கணவரே நன்கு, எளிதிலே அறிவார்! பழமை தோஷம், சேஷனின் உறவைத் துண்டித்துக் கொள்ளக் கணவருக்கு இயலவில்லை போலும்!

ஆம்! அப்படித்தான் இருக்கும்! நானும் பழகின தோஷத்தினால் சேஷனோடு பேசும்படியாகிறதே!......ஒரு வேளை சேஷன் கூட எங்கள் இருவரின் உல்லாசப் பொழுதைக் குலைக்க விரும்பாதவராகவே இருக்கலாம்! மனைவியில்லாத குறை, பழகின தோஷம், இவருடைய அழைப்பைத் தவிர்க்க முடியவில்லையோ, என்னவோ!......

ஞாயிறுதோறு மாகிலும் சேஷன் வந்து விட்டுப் போகட்டும் என்று என் மனம் அனுமதித்தாலும் தினந்தோறும் சாயங்காலம் சேஷன் என் கணவரின் பின்னோடு வந்து தொலைப்பதை அனுமதிக்கவே இல்லை. எப்படி கணவரிடம் இதைச் சொல்வேன்!

இதோ, காலடியோசை மட்டும் அல்ல, பேச்சுக் குரலும் கேட்கிறது! இருவருமாகத்தான் வருகிறார்கள்! கணவருக்கு ஏன் கொஞ்சமும் கவலை இல்லை!......அவருக்குத் தெரியவில்லையே! நான் சொல்வதா!

இதுபோல நாட்கள் பல வந்து போயின! நான் என்ன யோசித்து என்ன பயன்! கணவரிடம் 'பளிச்' சென்று சொல்லத் துணிவு வரவில்லை!......கணவரோடு ஒத்துப் போக உதவும் சமாதானங்களையே தேடிக் கொண்டு நாட்களை ஓட்டினேன். ஆனால், மேலும் மேலும் சந்தேகமும் அருவருப்பும் ஏற்படும்படியாகவே சம்பவங்கள் நிகழ்ந்தால் நான் மட்டும் என்ன செய்வேன்! 'சேஷன் நல்லவர்தானா!' என்னும் வினவும், 'இல்லை! இல்லை!' என்னும் விடையும் என் அந்தரங்கத்திலேயே முழங்கிய வண்ணம் இருந்தால், அமைதி காணுமா என் உள்ளம்! வானத்திலே இடி இடிப்பதற்கும், கடலிலே அலை எழும்புவதற்கும் காரணங்களையெல்லாம் அறிய முடியுமா! அல்லது தவிர்க்கத்தான் முடியுமா! மனமும் அப்படித்தானே! ஆராய்ச்சிக்கு அடங்கி விடுவதில்லையே!

ஒரு நாள் பஸ்ஸில் நாங்கள் மூவருமாகப் போய்க் கொண்டிருந்தோம். என் கணவர் நடுவில் அமர்ந்திருக்க சேஷன் அவருக்கு அந்தண்டையும், நான் இந்தண்டையும், வரிசைக் கிரமமாகப் பார்த்து உட்கார முடிந்ததே என்று சந்தோஷப்பட்டேன். இந்தச் சமயம் ஒரு பெண்மணி பஸ்ஸில் ஏறினாள். இங்கித மறந்த என் கணவர், அந்தப் பெண்ணுக்கு இடமளிக்க எழுந்தார். உடனே, காலியான இடத்திலே சேஷன் நகர்ந்து வந்தார்! சேஷனின் இடத்திலே அந்தப் பெண் அமர்ந்தாள்! என் உள்ளம் கொதித்தது! மூன்றும் மனுஷனாய், லட்சணமாய் எழுந்து அந்தப் பெண்ணுக்கு முதலிலேயே இடம் அளித்திருக்க வேண்டும் சேஷன்......! இப்பொழுது தாராளமாகத் தன் இடத்தைக் கொடுக்கிறாரே — என் பக்கத்தில் நகர்ந்து கொண்டு! இரண்டு பெண்களுக்கு நடுவிலே உட்கார விருப்பமா!

சடாரென எழுந்தேன் நான்; எதிரில் நின்ற என் கணவரைப் பார்த்து, "நீங்கள் உட்காருங்கள், நான் நிற்கிறேன்!" என்றேன்.

"ஏன்!" என்றார் கணவர்.

"சும்மாதான்!" என்றேன். ஐயோ! இப்படியுமா அப்பாவியாக இருப்பார் என்று அவர் மேலே கோபம் வந்தது—அவர் முகம் கொஞ்சமாகிலும் சலனம் காட்டினால்தானே!

"வேண்டாம், உட்காரேன் நீ" என்றார். இதற்குள் ஓடிக் கொண்டிருந்த பஸ் நின்றது. "நாம் இறங்க வேண்டிய இடம் வந்துவிட்டதே!" என்றார் பரபரப்புடன்.

அப்பா! இறங்க வேண்டிய இடம் வந்து விட்டதா! நல்ல காலம்......! கண்டம் தப்பியது......! இறங்கினேன்!

"'கூட வா!' என்று இனி ஒரு நாளும் உங்கள் நண்பரை அழைக்க வேண்டாம்!" என்று சொல்லிவிட வேண்டும் இன்று வீட்டுக்குச் சென்றதும்......இதுதான் என் துடிப்பு!

ஆனால் வீட்டுக்கு வந்த பிறகு முயல் குட்டி போல ஓடிவிட்டது அந்த எண்ணமும்...... சொல்ல நா எழவில்லை.

பிறரைக் குறை காணும் மனமும், பிறரிடம் உள்ள குறையைக் கவனிக்கும் எண்ணமும் இல்லாதவர் என் கணவர்! தன் கண்களாலே நேரில் காணும்பொழுதே அவர் கிரகிக்கவில்லையே! தாமாகவே தோன்றக் கூடிய உணர்ச்சிகளான பொறாமை, அருவருப்பு முதலியன அவருக்குத் தோன்றாத பொழுது, நான் சொல்லியா தெரியப் போகிறது......!

அடுத்த வாரம் என் கணவர், "இன்று சினிமா போகலாம்" என்று சொன்னார். "சேஷனும் வராமலா...! நான் வரவில்லை" என்று மட்டும் சொன்னேன். ஒரு மாதிரியாகி விட்டது அவர் முகம். இப்பொழுதாகிலும் என் மனதை வெளியிட்டிருக்கலாமல்லவா!

வெளியிட்டாலும் இன்று, அழைப்பிற்கிணங்க நண்பர் வரத்தான் போகிறார். நான் போகாவிட்டால் இவர் வருந்துவார்......! பிறகு சொல்லிப் பயன் ஒன்றுமில்லை!

இன்று போய் வந்த பிறகு சொல்லிவிடுவது உசிதம்! இந்த முடிவு செய்து கொண்டு, மூவருமாகச் சினிமாவுக்குப் போனோம்.

அந்தப் படத்திலே கதாநாயகியாக நடிக்கும் நடி அழகுக்குப் பெயர் பெற்றவள். அவளோடு என்னை ஒப்பிட்டுப் பலர், என் கணவர் உள்பட கூறியதுண்டு. நானும் பெருமையுடன் அந்தப் புகழுரையை ஏற்றதுண்டு. ஆனால் அன்று சினிமாவிலே சேஷன் அதே வார்த்தை கூறியபொழுது என் உள்ளம் சிறுமைப்பட்டது. ஏன்! எல்லோரும் கூறுவதையே சேஷனும் கூறியிருக்க, இதைத் தவறாக ஏற்கும் என் மனம்தான் தவறு செய்கிறது போலும் என்று என்னையே கடிந்து கொண்டேன். இதற்குப் பிறகு துணிந்து எப்படி நான் சேஷனைப் பற்றிக் கணவரிடம் சொல்வது......! என் மனம் குழம்பிவிட்டது.

இத்தகைய போராட்டங்கள் இனி நிகழாமல் தடை போடச் சிறந்த வழி எது என்று யோசித்தேன். அதன் விளைவாக 'இனி அவ்விரு நண்பர்களுடன் நான் சேர்ந்து புறப்படக் கூடாது!' என்று தீர்மானித்தேன்.

ஆனால் நிலைத்ததா இந்த உறுதி! ஒரு வாரம் ஏதோ காரணம் கூறித் தப்பித்துக் கொண்டேன். மறுவாரம், மாதம் பிறந்து சம்பளம் வந்திருந்ததால், வீட்டுக்குத் தேவையான



பொருட்களை நானும் கவனித்து வாங்க வேண்டியிருந்தது; கூடப் போனேன்.

ஒரு புஸ்தகக் கடையருகே வந்தோம். உள்ளே புகும் சமயம் என் கணவர் என்னருகே வந்து, "நீ பார்த்து வை சில புத்தகங்களை. நான் இதோ அண்டைக் கடையிலே 'டூத் பேஸ்ட்' 'ஸோப்' வாங்கி வருகிறேன்" என்றார். நான் துணுக்குற்று, "நான் மட்டும் இருக்கிறதா! என்ன சொன்னீர்கள்!" என்று முணு முணுத்தேன்.

"பயமா!...சேஷன் இருப்பான்! ஒரு நொடியில் வந்து விடுகிறேன்!" என்று கூறி விட்டு, சீக்கிரம் வந்து விடுவதற்காகத்தான் போலும், விரைந்து மறைந்து விட்டார் அவர்.

பேஷ்! சேஷன் ரொம்ப நல்ல துணை தான்!...என் கணவர், சேஷனின் இயல்பு அறிந்துதான் இவ்வாறு செய்கிறாரா!...அல்லது கல்மஷமற்றுத்தான் இப்படி இருக்கிறாரா!... இது எனக்குப் புரியவேயில்லை....சேஷனுக்கும் இவருக்கும் எத்தனை வித்தியாசம்! இவ்விருவரையும் ஒன்றாகப் பிணைக்கும் நட்பின் வித்தைதான் என்ன!

இப்படிப் புத்தகங்களைத் தேர்ந்தெடுப்பதற்குப் பதில் இவ்விருவர்களின் இயல்பை ஆராய்ந்துகொண்டிருந்தேன். அப்பொழுது, "பானு! இதோ பார்!" என்று சேஷனின் குரல் ஒலிக்கவே வேண்டா விருப்புடன் தலை நிமிர்ந்தேன்.

"இந்தக் கண்ணைப் பார்! அசல் உன் கண் மாதிரி! உம், உன் கண்ணேதான்!" என்று சேஷன் என்னையும் ஒரு முறை கூர்ந்து நோக்கி விட்டுத் தம் கையிலே பிரித்துப் பிடித்திருந்த பத்திரிகையிலும் ஓர் ஓரத்திலே கூர்ந்து பார்த்தார். பார்த்துவிட்டு என்னிடம் அந்தப் பத்திரிகையைக் கொடுத்தார். ஒரு ஆங்கில மாதப் பத்திரிகை அது. அதிலே 'அழகிய கண்கள்' என்னும் தலைப்பின் கீழ், பலவிதக் கண்களின் புகைப் படங்கள் காணப் பட்டன. "கரு வண்டுகள்" என வருணிக்கும் ஓர் கண்ணின் புகைப் படத்தைக் காட்டித்தான் சேஷன் அவ்வாறு கூறினார். சேஷன், ஆதிசேஷன் போலவே பிரும்மாண்டமான சர்ப்பமாய் எனக்குத் தோற்றமளித்தார்.

"உம், இருக்கலாம்" என்று சுருக்கமாய் விடையளித்து விட்டு, நான் மீண்டும் புத்தகம் புரட்டுவதிலே கவனம் செலுத்தினேன்.

வேற்றுப் பெண்ணிடம் பழகும் பண்பு இதுவா! 'சகஜம்' 'சகஜம்' என்றாலும் அதற்கு ஒரு வரம்பு இல்லையா! கச்சிதமாகப் பழக வேண்டாமா!

ஒரு நொடியிலே வந்து விடுவதாகக் கூறிச் சென்ற கணவர் பல யுகங்களுக்குப் பின்னர் வந்தது கண்டு மிகுந்த கோபத்துடன், "ஏன் இவ்வளவு நேரம்!" என்று கேட்டேன். அவர் ரொம்பச் சாவதானமாக, "எத்தனை நாழிகை யாகிவிட்டது! பதினொரு நிமிஷம்! இதுகூட ஆகாதா கடை யென்றால்" என்று கைக்கடி காரத்தைக் கொண்டுவந்து என் முகத்துக்கு எதிரே காட்டினார். "என்ன புத்தகம்!...... இது நல்லதாச்சே! வாங்கலாமா!" என்று என் கையிலிருந்த புத்தகத்தைப் பற்றிச் சேஷனுடன் அளவளாவ ஆரம்பித்து விட்

டார். எனக்குப் புத்தகம் பொறுக்கத் திறமை இருக்கிறது என்று மெச்சிக் கொள்ளத் தொடங்கி விட்டார்!

தற்சமயம், கணவரிடம் சேஷனைப் பற்றிக் குறை கூறுவதிலே பயனே இல்லை. "சேஷன் நல்லவர் அல்ல!" என்னும் உறுதி ஏற்பட வேண்டும் எனக்கு. கணவரிடம் என் அதிருப்தியைக் கூற எனக்கு ஆதாரம் வேண்டும்! அரை குறையாகக் கணவரிடம் முணுமுணுப்பதிலே பயன் இல்லை. தன் கணவனின் நேர்மையற்ற குணத்தை, சஞ்சல சித்தத்தை, சீதா சிறிதேனும் அறிந்திருக்க மாட்டாளா! நிச்சயம் அறிந்தே இருப்பாள்! பிற பெண்களைப் பார்த்து இளித்துக் குழையும் கணவனின் இயல்பை நிச்சயம் அறிந்திருப்பாள்!......தன் கணவனைப் பற்றி அவள் கொண்டுள்ள அபிப்பிராயம் எத்தகையது என்பதைத் தெரிந்து கொண்டு, உடனே தயக்கம் இன்றி, கறுக்குத் தெரித்தாற் போல கணவருக்கு என் அன்புக் கட்டளையை இட வேண்டியதுதான். சேஷனின் தோழமையை விட்டு விடும்படி சொல்லிவிட வேண்டியதுதான்......!

சீதாவுக்குக் கடிதம் ஒன்று வரைந்தேன். லோகாபிராமமாகப் பல விஷயங்களையும் பல தகவல்களையும் எழுதிக் கொண்டே போய், ஓரிடத்திலே வலையை விரித்து விட்டேன்.

"நாம், இந்து பெண்கள், கணவனே கடவுள் என்று இருந்து விடுகிறோம், சீதா! இன்றைக்கு அவர்கள் கண் முன் நாம் இருக்கும்பொழுது நமக்கு நிகர் யார் என்றும் நம்மை விட்டால் அவர்களுக்கு உலகம் ஏது என்றும் மெச்சுவார்கள். நாளை நாம் மறைந்தால், இந்தப் புகழுரை வேறொருத்தியிடம்! இந்தப் புருஷர்கள் அனைவரும் வஞ்சகர்கள்!" என்று ஓர் பகுதியிலே எழுதினேன்.

"ஆம், உண்மை!" என்பாள் சீதா! சேஷனைப் பற்றிய என் எண்ணம் உறுதிப் பட்டு விடும் என்று நினைத்தேன்.

கடிதத்தை மடித்துத் தபால் கவருக்குள்ளே புகுத்திவைக்கும் பொழுது, கண்ணாடிப் படுத்திருந்த என் கணவரைப் பார்த்தேன். "இந்த என் குற்றச் சாட்டு உங்களைச் சாரவே சாராது! வேறு பல புருஷர்களுக்கு — முக்கியமாக — சேஷனுக்குப் பொருந்தும்!" என்று நன்றி பொங்கக் கூறியது என் இதயம்.

சீதா எழுதிய பதில் கடிதமும் வந்தது. "புருஷர்களை நம்பலாகாது என்றுதான் சகஜமாகச் சொல்கிறார்கள். ஆனால் எல்லா ஆடவர்களையும் ஒருமிக்கப் பழிப்பது தவறு. உத்தம புருஷர்கள் எப்போதும் உலகத்திலே சிலர் உண்டு. நான் ஒரு லட்சிய புருஷனின் மனைவி என்னும் பெருமிதம் எனக்கு உண்டு. உனக்கு அத்தகைய பெருமை இல்லையா!" என்று எழுதி யிருந்தாள்.

ஐயோ! இப்படியா நினைக்கிறாள் சீதா! இப்படியா சொல்கிறாள் பேதைப் பெண்! அவள் புருஷனா லட்சிய புருஷன்! அவள் கணவனைப் பற்றி நான் நினைப்பதென்ன! அவள் நினைப்பது என்ன! மனைவியின் அன்பென்னும் அஞ்ஞானம் திரையிட்டு விட்டது போலும்!

ஆ! அப்படியானால் நான்! நான் மட்டும் ஒரு மனைவியில்லையா! என் கணவர் குணக்குன்று, அன்பின் உரு, சீலத்தின் சிற்பம் என்றெல்லாம் நினைக்கின்றேனே!......இதுவும் பிரமைதானோ!

பிறர்க்கும் அவர் உத்தமர் அல்லவோ!...... பிறர்க்கும் அவர் லட்சிய புருஷராகத் தோன்றுவதில்லையோ! ...... அல்ல போலும்! சீதா கேட்கிறாளே, தன்னைப் போல எனக்குப் பெருமை உண்டா என்று!......

சீதாவின் கடிதம் கண்டது முதலே என் மனம் சாந்தி இழந்தது. ஓயாத சிந்தனை, தெளிவில்லா ஆராய்ச்சி, முடிவு அற்ற குழப்பம் என்னுள் ளத்துள்ளே நிலவத் தொடங்கி விட்டது.

"என்ன இருந்தாலும் சேஷனைப்போல என் கணவர் இருக்கமாட்டார்" என்ற நல்லெண்ணமும் என்னைவிட்டு அகலவில்லை.

"இந்த என் நம்பிக்கை, மனைவியின் ஸ்தானத்திலே எழும் அஞ்ஞானம்தான்!" என்ற நினைப்பும் போகவில்லை.

"என் கணவரையும் நம்பக்கூடாதுதான்!" என்ற குலடச்சலையும் என்னால் பொறுக்கக் கூடவில்லை.

சேஷன் என்னோடு பழகிய முறை கண்டு கணவர் என்மீது சந்தேகப்பட வேண்டியது போக,



என் கணவரின்பால் எனக்கு அவநம்பிக்கை ஏற்படலாச்சே!......என் செய்வேன் நான்! நம்பிக்கை, வாழ்க்கையின் ஊன்றுகோல் என்பது தெரியாதா எனக்கு! தெரிந்து என்ன பயன்! என் உறுதி தளர்ந்து விட்டதே!

எங்கள் இல்வாழ்க்கையின் இன்பத்திலே இதுவரை ஒரு மாசு உண்டா! அவருக்கும் எனக்கும் மிடையே தோன்றியிருந்த அன்பு, அந்த அன்பின் மேலே எங்களுக்கு இருந்த பரஸ்பர உறுதி இவற்றின் காரணமாக எத்தனை பெருமிதம் எனக்கு, முன்பு! இப்பொழுது!...

“சரியான தோழர்தான்! அவர் நட்பு விடுவீர்களா!” என்றேன் ஒருநாள். அவர் சிரித்துக் கொண்டார், சாதுபோல.

“மனைவியின்மேல் சந்தேகம் கொண்டு அவளைக் கட்டுப்படுத்தும் புருஷன்தான் அன்பு நிறைந்த கணவன்! எவருடன் பேசினால் என்ன, எங்கே போனால் என்ன என்று மனைவி விஷயத்திலே அசிரத்தையாக இருக்கும் கணவனின் அன்பு பூரணத்துவம் இல்லாத அன்பு!” என்று ஒரு நாள் சொன்னேன். சொல்லி விடுகிறேனே யொழிய சொல்லி விட்டு அங்கே நிற்கத் துணிவு இல்லை!...புரியும்படியாயும் ஒரே மூச்சிலே சொல்லி விட, என் மனதிலே அத்தனை வன்மம் இல்லை. நாவிலே வன்மை இல்லை. ஏதோ குளறிக் கொட்டி விடுகிறேன். பிறகு என் மனதிலே உண்டாகும் வேதனை கொஞ்ச நஞ்சமல்ல.

இந்த என் வேதனை நீங்குமா! குற்றங் குறைகள் மலிந்த சாதாரண மனிதர்தானா என் கணவரும்! நான் நினைத்திருந்ததைப் போல ஆதர்ச புருஷர் அல்லவா! — இப்படி ஏங்கியது என் மனம்.

எங்காவது கொஞ்சநாள் இடம் மாறி இருந்து மனம் மாறி வர வேண்டும்!...இந்த ‘ரேடலே’ இந்த மனக் குழப்பத்தைப் பிரிவு தான் சரி செய்யும்.

கணவரிடம் பேச்சுத் துவக்கினேன். “இடம் மாற்றம் வேணும் போலே இருக்கு எனக்கு!” என்றேன். ‘எனக்கு’ என்னும் வார்த்தையைப் பளிச்சென்று சொல்லத் தயக்கமாக இருந்தது.

“அதற்கென்ன, பேஷாக இடம் மாறினால் போச்சு! லீவுக்கு எழுதிப் போடட்டுமா! மூன்று வாரம் லீவு கிடைக்கும். உன் பெற்றோர் வீட்டிலே பத்துநாள். என் பெற்றோர் வீட்டிலே பத்து நாள்! குஷியாய்ப்போய் இருந்துவிட்டு வரலாம்!” என்றார் கணவர்.

அவர் சொன்ன பாணி கண்டு உடலும் மனமும் சிலிர்த்துப் பூரித்துப் போனேன். இருவருமாகச் சேர்ந்து பயணம் போனால், மனம் பதமாகப் பிரிவு இராதே என்று தோன்றினாலும், என் காதல் மனம் கணவரின் ஏற்பாட்டினையே வரவேற்றது. தாற்காலிகமாக சேஷனோடு அவர் நட்பு தடைப்படும் அல்லவா! அதுவே போதும் என்று தோன்றியது.

★

நாங்கள் இருவரும் விடுமுறையைக் குஷாலாகக் கழிக்கவே கிளம்பினோம். என் மனத்துள்ளே அந்த அவநம்பிக்கையின் உறுத்தல் இருந்தாலும், உல்லாசப் பயணத்தின் போதையிலே அதை அலக்ஷியம் செய்தேன்.

முதலில் நாங்கள் என் மாமனார் இருந்த ஊருக்குப் போனோம்.

இதற்கு முன்பு மூன்று நான்கு தடவைகள், நோன்பு, பண்டிகை போன்ற விசேஷ சம்பவங்களை யொட்டியே சென்றேன். அப்போதெல்லாம் இரண்டு மூன்று நாட்களுக்கு மேலே தங்கினதில்லை. இந்தத் தடவைதான் பத்து நாள் தங்கப் போகிறேன். மாமனார் மாமியாரிடம் அதிகம் தங்கிப் பழகாததனால் தான் போலும், அவர்கள் எனக்கு நண்பர்கள் போலத் தோன்றினார்கள். அவர்களோடு குஷாலாக இருக்கும் ஆசையோடு போனேன்.

இரண்டு மூன்று நாட்களில் என் உற்சாகம் சிறிது குன்றிவிட்டது. முன்பெல்லாம் என்னைக் கூட்டிக் கொள்ளாமல் கணவர் வெளியே புறப்பட்ட நாட்கள் மிகச் சொற்பம். இங்கே அவர் போக்கு புதுமையாக இருந்தது. அவர் பாட்டுக்குக் கிளம்புவார், போவார், மெள்ள வீட்டுக்குத் திரும்பி வருவார்.

எங்கே போகிறார்! யாராவது பழைய நண்பர்கள் வீட்டுக்கா!...என்னை மணக்கு முன்பு இங்கே எந்தப் பெண் மீதாவது நாட்டம் இருந்திருக்குமோ!...இது போலச் சில சந்தேகங்கள் எழுந்தன எனக்கு.

இந்தத் தடவை அதிக நாள் தங்கியதனால் எனக்குச் சில புது விஷயங்களைக் காண முடிந்தது. முன்பு கல்லூரி நாளிலே என் கணவர் எத்தகையவர் என்பதை மெல்ல இங்கே அவருடைய பெற்றோர் மூலம் அறிந்து விட வேண்டும் என்ற அவாவும் தோன்றியது.

ஓரிரண்டு நாள் கழித்து ஒரு இளம் பெண் வந்தாள். கணவர் அவளோடு பேசினார். அவளுடைய குழந்தையை எடுத்து முத்தமிட்டுக் கொஞ்சினார். அவள் போன பிறகு என் மாமியார் “அவளை இவனுக்குக் கொடுப்பதாகக் கூடப் பேச்சு இருந்தது. இப்போ அவள் ஒரு குழந்தைக்குத் தாயாகி விட்டாள். உனக்கும் ஒரு குழந்தை அதுபோலப் பிறக்க வேண்டும்” என்றாள்.

‘அவளை அவருக்குக் கொடுப்பதாக இருந்தது’ என்ற சொல் என் செவியிலும், அவள் குழந்தையை அவர் முத்தமிட்ட காட்சி என் கண்களிலும் சுழன்று சுழன்று வந்தன. அந்தச் சுழற்சியிலே அழுந்தி கொண்டு நான் “அவளையே பண்ணிக் கொண்டிருந்தால் அதே போல் குழந்தை பிறந்திருக்கும்!” என்று சொல்லி விட்டேன்! அதன் அர்த்தம் புரிந்ததோ இல்லையோ......என் கணவரும் பேசவில்லை, அவர் அன்னையும் பேசவில்லை.

பிறகு ஒருநாள் சாப்பிட்டுக் கொண்டிருந்த பொழுது “இன்று எல்லாம் புளி சற்றுத் தூக்கலாய் இருக்கு” என்றார் கணவர்.

“நேற்று ரசம் மட்டும் புளிப்பு. இன்று எல்லாமே புளிப்பா! கொஞ்ச நாள் போனால் நான் கூடப் புளித்துவிடப் போகிறேன்!” என்றேன் சிரித்துக் கொண்டே. மாமியார் பக்கம் திரும்பிப் பார்த்தேன். ஒன்றும் சொல்லவில்லை மாமியார்!

‘கட்டுப்பட்டவர் அவர் அல்ல’ என்னும் வார்த்தை ஏன், வரவில்லை அவருடைய அம்மா விடமிருந்து!

[அடுத்த இதழில் முடியும்]




சுந்தரம் ரொம்ப நல்ல பையன். அவனுக்குப் பசுவைக் கண்டால் அலாதிப் பிரியம். அதன் கழுத்தைத் தடவிக் கொடுப்பான். முதுகைத் தட்டிக் கொடுப்பான். இப்படி அவனுக்குப் பல மிருகங்களிடம் ஆசையும் அனுதாபமும் உண்டு.

ஒரு நாள் அவன் காட்டு வழியாகப் போய்க் கொண்டிருந்த போது, ஒரு குடிசை வாசலில் ஆடு ஒன்று கட்டிவைக்கப்பட்டிருந்ததைப் பார்த்தான். அந்த ஆடு எப்போதும் அந்தக் கழியில் கட்டப்பட்டிருக்கும். அதுவும் மேயப் போக முடியாது; அதற்குத் தீனி கொண்டு வந்து போடுபவர்களும் கிடையாது

ஏனெனில் அந்த ஆட்டின் சொந்தக்காரன் நொண்டி கிழம். அவனே தள்ளாடித் தள்ளாடி நடக்க வேண்டியிருந்தது. பின் அவன் எப்படி ஆட்டுக்குத் தழையும் குழையும் கொண்டு வந்து போட முடியும்? ஆகவே, சுந்தரம் ஆட்டுக்குட்டியிடம் நின்றுகொண்டு தடவிக் கொடுப்பதைப் பார்த்த கிழவன், "தம்பி, உனக்கு அந்த ஆடு வேண்டுமா?" என்று கேட்டான் அந்தக் கிழவன்.

"ஆமாம்" என்றான் சுந்தரம்.

"அப்படியானால் நீயே பிடித்துக் கொண்டு போ. உன் வீட்டுக்குக் கொண்டு போய் வளர்த்துக் கொள்" என்றான்.

சுந்தரத்துக்கு ஒரே சந்தோஷம், தனக்கு ஆடு கிடைத்து விட்டதே என்று. அந்தக் கிழவனுக்கும் ஒரே சந்தோஷம், இந்த ஆட்டை வளர்க்கும் இடைஞ்சலிலிருந்து விடுபட்டோமே என்று.

வீட்டுக்கு ரொம்பப் பெருமையுடன் சுந்தரம் ஆட்டைப் பிடித்துச் சென்றான்.

அப்பா அம்மாவிடம் தனக்குக் கிடைத்த ஆட்டைப் பற்றிச் சொன்னான். "சரி, நம்ம மாட்டுக் கொட்டிலில் கொண்டு போய்க் கட்டு!" என்று அவன் அப்பா முத்து கூறிவிட்டான். அவன் பாட்டிக்கு மட்டும் இந்த ஆடு வந்ததில் அவ்வளவு திருப்தி கிடையாது. பாட்டிக்கு யாராகிலும் எந்தப் பொருளாகிலும் இனாமாகக் கொடுத்தால் அந்தப் பொருளில் ஏதாகிலும் கெடுதல் இருக்கும் என்பது அவள் அபிப்பிராயம்.

ஆட்டை வீட்டுக் கொட்டிலில் கட்டிவிட்டு அவன் வெளியே விளையாடப் போய் விட்டான். முத்துவும் வேலைக்குப் போய் விட்டான். சுந்தரத்தின் தாயாரும் கடைத் தெருவில் சாமான் வாங்கி வரப் போய்விட்டாள். கிழவியும் அடுப்பு எரிக்கச் சுள்ளி பொறுக்கிக் கொண்டுவர காட்டுக்குப் போய்விட்டாள்.

கொட்டிலிலிருந்த ஆட்டுக்கு எல்லாம் ஒரே அதிசயமாயிருந்தது. கொட்டிலிலிருந்த புல்லும், தண்ணீரும் குடித்தவுடன் சற்றுத் தெம்பு வந்தது. உடனே கயிற்றை அறுத்துக் கொண்டு வெளியே வந்தது.

வெளியில் பெரிய கூடை கவிழ்த்து வைக்கப்பட்டிருந்தது. ஆட்டுக்கு அதற்குள் என்ன இருக்கிறது என்று பார்க்க வேண்டும் என்று ரொம்பவும் ஆவலாக இருந்தது. உடனே அது அதை முட்டிக் கவிழ்த்தது. அதற்குள்ளிருந்த கோழி




களும் கோழிக் குஞ்சுகளும் விடுதலை பெற்று நாலாபுறமும் ஓடின. ஆடு இவை ஏன் இப்படி ஓடுகின்றன என்று தெரியாமல் விழித்தது.

குடிசைக் கதவு சாத்தியிருந்தது. அதைத் தன் தலையால் ஆட்டுக் குட்டி ஒரு முட்டு முட்டியது. உடனே கதவு படாரென்று திறந்து கொண்டது. ஆட்டுக்குட்டி மெள்ள உள்ளே நுழைந்தது. அங்கே கம கம என்று சாதத்தின் வாசனையும் குழம்பின் வாசனையும் வந்தது. ஒவ்வொரு சட்டிப் பானையாக அது ஆராய்ச்சி செய்து கொண்டே வந்தது. கடைசியில் சோற்றுப் பானையும் அதன்மேல் குழம்புப் பானையும் இருந்தது. குழம்புப் பானையில் தலையைவிட்டது. மிளகாய்த் தண்ணீர் மூக்கில் ஏறி விட்டது. கண்ணிலும் மூக்கிலும் ஜலம் வந்து விட்டது. பானைக்குள்ளிருந்து தலையை ஆட்டிக் கொண்டே வெளியே எடுத்தது. தலையுடன் சட்டியும் வந்து 'தொப்' பென்று கீழே விழுந்து சுக்குச் சுக்கலாக உடைந்து விட்டது. குழம்பு நாலா பக்கமும் பரவியது. பிறகு சோற்றுப் பானையில் தலையை விட்டது. அதுவும் கவிழ்ந்து சாதம் நாற்புறமும் சிதறியது.

இந்தச் சமயம் வெளியே போயிருந்த கிழவி வந்து சேர்ந்தாள். ஆட்டைச் சபித்துக் கொண்டே பிடித்துக் கட்டிப் போட்டாள்.

கொஞ்ச நாழிகையில், சுந்தரம், அவனுடைய தாய் தந்தை எல்லோரும் வந்தார்கள். அவர்களிடம் கிழவி இந்த ஆட்டின் அட்டூழியத்தைப் பற்றிச் சொல்லி விட்டு 'நான்தான் அப்பவே சொன்னேனே, தானம் கிடைத்த எந்த வஸ்துவையும் கப்பக்கூடாது என்று. துஷ்ட ஆடாக இருப்பதனால் சும்மா கொடுத்து விட்டார்கள். சுந்தரம், இப்போதே இந்த ஆட்டைக் கொண்டுபோய் யார் கொடுத்தார்களோ அவர்களிடமே திருப்பிக் கொடுத்து விடு. போ!" என்றான்.

அவனுடைய பெற்றோர்களும் "ஆமாம், உடனே கொண்டு போய்க் கொடுத்து விடு!" என்றார்கள்.

சுந்தரம் சோர்ந்த முகத்துடன் ஆட்டைப் பற்றிக்கொண்டு போய்க்கொண்டிருந்தான். ஆடு அவன் பின்னால் கொஞ்ச தூரத்தில் இலைகளையும் தழைகளையும் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் பார்த்துக் கவ்விக் கொண்டே வந்தது.

திடீர் என்று ஏதோ சடசட என்று முறியும் சத்தம் கேட்டது. எந்தப் பக்கத்திலிருந்து அந்தச் சத்தம் வருகிறது என்று இப்படி அப்படியும் திரும்பிப் பார்ப்பதற்குள், ஏதோ பின்னால் ஓரே வேகமாக வந்து முட்டியது. அடுத்த கணம் சுந்தரம் கண் திறந்து பார்த்தபோது, ஒரு குட்டையில் இடுப்பு ஆழ ஜலத்தில் தான் நிற்பதை உணர்ந்தான். சுற்று முற்றும் பார்த்தபோது ஒரு பெரிய புளியமரம் வெட்டிச் சாய்க்கப்பட்டிருந்தது. அந்தப் புளியமரம் முறிந்து விழும் சத்தம்தான் சற்று முன் கேட்டது என்று தெரிந்து கொண்டான். தான் அந்தக் குட்டையில் விழுந்திராவிட்டால் தன் மேல் அந்த மரம் விழுந்து நசுங்கிப் போயிருப்பான் என்பதும் தெரிந்து கொண்டான்.

புளிய மரத்தைக் குத்தகை எடுத்திருந்த சுந்தரத்தின் மாமன் அங்கே வந்தான். "ஏண்டா, சுந்தரம்! 'ஒதுங்கிப் போ!' 'ஒதுங்கிப் போ!' என்று எவ்வளவு தொண்டைகிழியக் கத்தியும் நீ பாட்டுக்கு மனோராஜ்யத்தில் மூழ்கி நடந்து வருகிறாயே! உன் பின்னால் வந்த ஆடு உன்னை முட்டி இந்தக் குட்டையில் தள்ளியிராவிட்டால் நீ பிழைத்திருக்க மாட்டாய்! அந்த ஆடுதான் உன்னைக் காப்பாற்றியது!" என்று சொன்னான். அப்போது 'மே,மே!' என்று கூவிக்கொண்டே ஆடு குட்டையை விட்டு வெளியே வந்தது. அப்போதிலிருந்து அந்த ஆட்டுக்கு அதிர்ஷ்டம் அடிக்கத் தொடங்கியது.

ஆமாம், சுந்தரத்தைக் காப்பாற்றி உயிர்ப் பிச்சையளித்த ஆட்டை வளர்க்க மாட்டோம் என்று யார் சொல்வார்கள்? பாட்டியினால்தான் சொல்ல முடியுமா? ஆகவே அன்றைய தினத்திலிருந்து சுந்தரத்தின் வீட்டிலே ஆடும் ராஜபோகத்தில் வளர்ந்தது!



# போட்டோவில் விழுந்தார்!

— சாமா —

கோபாலனுக்கு அவன் மாமா ஒரு போட்டோ பெட்டி வாங்கிக் கொடுத்தார். போட்டோ எடுப்பதில் அவனுக்கு அளவு கடந்த ஆசை. முதலில் அவனுக்கு எதைப் போட்டோ எடுப்பது என்றே புரியவில்லை. பிறகு கொஞ்சம் கொஞ்சமாகப் பழகிக் கொண்டான். புஷ்பங்களில் உட்காரும் வண்ணாத்திப் பூச்சியை எடுப்பான், புஷ்பங்களை எடுப்பான்; மான் குட்டியை எடுப்பான்.



ஒருநாள் மீசை மாமா அவன் போட்டோ எடுத்துக் கொண்டிருந்தபோது வந்தார். "டேய், இங்கே கொண்டாடா பெட்டியை! நீ சின்னப் பயல், உனக்கு என்னடா எடுக்கத் தெரியும்? நீ போய் அந்த மேட்டிலுள்ள மரத்துண்டின் மேல் உட்கார். உன்னை போட்டோ எடுத்துத் தருகிறேன்" என்றார். கோபாலனுக்கு இது பிடிக்கவே இல்லை. கோபம் கோபமாக வந்தது! கோபாலன் வேறு வழியில்லாமல், 'சரி' என்று மேட்டின் மேலிருந்த பெரிய மரத்துண்டின் மேல் உட்கார்ந்தான். மீசைக்காரரும் போட்டோ பெட்டியைக் கண்ணில் வைத்துப் பார்த்தார். மரத்துண்டின் மேல் உட்கார்ந்த கோபால் முன்னும் பின்னுமாக ஆடினான். மரம் கொஞ்சம் கொஞ்சமாக அசைந்தது. கடைசியில் வேகமாக மேட்டின் சரிவில் புரண்டது. கோபால் கீழே சாய்ந்தான். ஆனால் விழாமல் உட்கார்ந்தான். புரண்ட மரம் மீசை மாமாவின் காலில் போய் அடிக்க மாமா 'தொபகடீர்' என்று விழுந்தார். அவர் கையிலிருந்த போட்டோ பெட்டி ஆகாசத்தில் கிளம்பியது. கோபால் 'சட்' டென்று அதைப் பிடித்துக் கொண்டு, "சபாஷ் மாமா இது நல்ல போஸ். அப்படியே இருங்கள்" என்று விழுந்தவரை அப்படியே போட்டோ பிடித்தான். மாமாவுக்குக் கோபம் கோபமாக வந்தது. இருந்தாலும் இது வரையிலும் கோபால் எடுத்த படங்களில் மீசை மாமா 'போஸ்' தான் ஜோராக இருக்கிறது என்று பலரும் பாராட்டினர்.











# ஞாபகார்த்தம்

பி. எஸ். மணி

திவான்பகதூர் தில்லைநாயகத்தைத் திண்ணையூரில் தெரியாதவர்களே கிடையாது. அவர்தான் திண்ணையூர் நகரசபையின் தலைவர். தமது காரியங்களைச் சாமர்த்தியமாகச் சாதித்துக் கொள்வதில் அவர் அசகாய சூரர். அவருடைய திறமையைக் கண்டு வியக்காதவர் திண்ணையூரில் இல்லை.

அன்று திண்ணையூர் நகரசபையில் அங்கத்தினர்கள் அனைவரும் காரசாரமாக விவாதம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய விவாதம் காலஞ்சென்ற நகரசபைத் தலைவர் திக்கற்ற விநாயகம் பிள்ளைக்கு ஞாபகார்த்தம் ஏற்படுவதைக் குறித்து நடந்து கொண்டிருந்தது. அங்கத்தினர்களில் ஒருவர் எழுந்திருந்து "திக்கற்ற விநாயகம்பிள்ளை நம் திண்ணையூர் நகரசபையின் முன்னேற்றத்துக்காகத் தம் வாழ்நாள் முழுதும் அல்லும் பகலும் உழைத்திருக்கிறார். அவருடைய இடையறா உழைப்பினால் நகரசபை பெரிதும் அபிவிருத்தி அடைந்திருக்கிறது. அதனால் அவருக்குக் கட்டாயம் ஞாபகார்த்தம் ஏற்படுத்த வேண்டியது தான். அவர் பேரில் ஒரு வாசகசாலை திறந்து வைத்து விடலாம் என்று நான் யோசனை கூறுகிறேன்" என்று கூறி விட்டு உட்கார்ந்தார். இதற்குள் மற்றொரு அங்கத்தினர் எழுந்து நின்று, "நம் ஊரில் அநேக வாசகசாலைகள் இருக்கின்றன. ஆனால் ஒரு பூங்கா இருந்தால்......!" என்று சொல்லி முடிப்பதற்குள் மற்றொருவர் குதித்தெழுந்து, "பூங்காவும் வேண்டாம், வாசக சாலையும் வேண்டாம். பேசாமல் அவர் படத்தை நம் நகர சபை மண்டபத்தில் திறந்து வைத்து விடலாம். அவ்வாறு செய்தால் நகர சபைக்குப் பணச் செலவும் ஏற்படாது" என்று கத்தினார். இப்படி ஒருவருக்கொருவர் வேறுபட்ட அபிப்பிராயத்துடன் கூச்சல் போட ஆரம்பித்தனர். நகர சபை அப்பொழுது நரக சபையாகக் காட்சியளித்தது.

இவ்வளவு நேரமும் மௌன விரதம் அனுஷ்டித்த தலைவர் திவான்பகதூர் தில்லைநாயகம் கூச்சல் கட்டுக்கடங்காமல் போகவே, எழுந்து நின்று, "தயவு செய்து அங்கத்தினர்கள் கூச்சல் போடாமல் என் வார்த்தைகளுக்குச் சிறிது செவி சாய்க்கக் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று கூறி விட்டு ஒரு கனைப்புக் கனைத்தார். ஹாலில் நிச்சப்தம் நிலவ ஆரம்பித்தது.

பிறகு அவர், "திக்கற்ற விநாயகம் பிள்ளை நம் திண்ணையூருக்குச் செய்த சேவை கொஞ்ச நஞ்சமல்ல. அவருடைய சேவையை எடுத்துக் காட்டும் ஞாபகார்த்தம் திண்ணையூரில் நீடூழிகாலம் இருக்க வேண்டுமல்லவா?" என்று கேட்டு விட்டு நிறுத்தினார்.

எல்லோரும் ஏகோபித்த குரலுடன், "இருக்கவேண்டியதுதான்" என்றனர்.

"அதற்காக அவர் படத்தை மட்டும் நகர சபை மண்டபத்தில் திறந்து வைக்கலாமா?"

"கூடாதுதான்" என்று ஏகோபித்த கூக்குரல் எழுந்தது.

"பூங்கா ஏற்படுத்தலாம். ஆனால் திண்ணையூருக்கு அது அவ்வளவு முக்கியமல்ல. நம் திண்ணையூருக்கு மிக முக்கியமானதும் மக்களுக்கு மிகுந்த பிரயோசன மளிக்கக் கூடியதும், நீடூழி காலம் நிலைத்திருக்கக் கூடியதுமான ஞாபகார்த்தம் ஒன்று தேவை. அதை நீங்களே அறிவீர்கள்" என்று கூறிச் சிறிது நிறுத்தினார் தில்லைநாயகம்.

"அது என்ன?" என்று மூலைக்கொரு பக்கம் கேள்விகள் எழுந்தன.

"திண்ணையூர் மக்கள் அறிவுப் பசியால் வாடுவது உங்களுக்குத் தெரியும். நீங்களே முன்பு திண்ணையூருக்கு ஒரு பள்ளிக்கூடம் வேண்டுமென்று யோசனை கூறியிருக்கிறீர்கள். அந்த யோசனையை இப்பொழுது நிறைவேற்றினால் என்ன? திக்கற்ற விநாயகம் பிள்ளைக்கும் அது ஒரு சிறந்த ஞாபகார்த்தமாயிருக்கும்" என்று கூறி முடித்தார் திவான் பகதூர் தில்லைநாயகம்.

அனைவரும், "ஆஹா! அப்படியே செய்து விடலாம். பேஷான யோசனை" என்று ஏகோபித்து முடிவு கூறினர். திக்கற்ற விநாயகம் பிள்ளையவர்களின் ஞாபகார்த்தமாக ஒரு பள்ளிக்கூடம் திறப்பது என்ற தீர்மானத்துடன் கூட்டம் கலைந்தது.

திவான் பகதூர் தில்லைநாயகம் மிகுந்த மகிழ்ச்சியுடன் வீடு திரும்பினார். அன்றிரவு வீடு வந்து சேர்ந்ததும், அவர் தமது கண்ட்ராக்டர் நண்பருக்குக் கீழ்க்கண்ட கடிதத்தை எழுதினார்.

அன்புள்ள நண்பருக்கு,

உங்களுக்கு ஒரு மாதத்துக்கு முன்பு வாக்களித்தபடி நீங்கள் பள்ளிக்கூடம் கட்டுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கலாம்.

திவான்பகதூர் தில்லைநாயகம்.

# காதல் உலகம்!

ஸோமாஸ்



அன்றைக்குச் சாவகாசமாக என் அறையில் உட்கார்ந்து என்னத்தை யெல்லாமோ நினைத்து மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்தேன். பிறகு மேஜை மேல் கிடந்த ஒரு புத்தகத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கினேன்.

“காதல்தான் மனித வர்க்கத்தை அழிந்து போகாமல் எத்தனையோ காலமாகக் காப்பாற்றி வந்திருக்கிறது” என்ற வாக்கியம் என் கவனத்தைக் கவர்ந்தது.

உடனே புத்தகத்தை மூடி விட்டேன். ‘இதை விட்டால் உலகத்தில் வேறு விஷயமே கிடையாதா?’ என்று என் உள் மனசு கேட்ட கேள்விக்குப் பதில் என்னால் சொல்ல முடியவில்லை.

நாற்காலியில் சாய்ந்து அண்ணாந்து பார்த்த எனக்கு, ஆணும் பெண்ணுமாக இரண்டு குருவிகள் காட்சி அளித்தன. அவை யிரண்டும் என்னையே பார்த்தன. பிறகு ஒன்றையொன்று பார்த்துக் கொண்டன. அப்புறம் இரண்டு குருவிகளும் என்னைப் பார்த்து எதேதோ பேசிக் கலகல வென்று சிரித்து விட்டு ஓடி விட்டன. அவை எப்படி என் மனத்தில் எழுந்த எண்ணத்தைப் புரிந்து கொண்டன?

★

இரண்டு நாட்களுக்குமுன்பு ஒரு சினிமாப் படம் பார்த்தேன். அதில் காதலன் தன் காதலியை எத்தனை கஷ்டங்களிலிருந்து மீட்கிறான்! அது கிடக்கட்டும். அந்த அழகியின் அன்பைப் பெற என்னவெல்லாம் சாகசம் செய்கிறான்! தீப் பிடித்து எரியும் மாளிகையிலிருந்து தன் உயிரையும் பொருட்படுத்தாமல் காதலியைக் காப்பாற்றுகிறான். ஒரு நந்தவனத்தில் காதலி மலர் கொய்கிறாள். அப்பொழுது சமீபத்திலிருந்த தேன்கூடு திடீரென்று கலைந்து நூற்றுக் கணக்கான தேனீக்கள் பறந்து அவளைச் சூழ்ந்து கொண்டன. அடேயப்பா! என்ன தைரியம் இருந்தது அவனுக்கு! கொஞ்சங் கூடப் பயப்படாமல் அந்தப் பயங்கரத் தேனீக்களிடமிருந்து அவளைக் காப்பாற்றினான்! எப்படியிருக்கிறது கதை!

★

என் நண்பன் ஒருவன் இருக்கிறான். அவன் நன்றாகத்தான் இருந்தான். அவனுக்கு என்ன வந்து விட்டதோ தெரியவில்லை, திடீரென்று ஒரு மாதிரி ஆகி விட்டான். “படிப்பு அதிகமாய்ப் போய் விட்டது; ஆகையினால் மூளை குழம்பி விட்டது!” என்றார்கள் சிலர். வேறு சிலர், “ஏதாவது புது மாதிரி ஜுரம் வந்தாலும் வரலாம்!” என்று அபிப்பிராயப் பட்டனர். இது வரையில் நல்ல பிள்ளையாயிருந்தவன் திடீரென்று மாறி விட்டான். ‘ஸெண்ட்’ பூசிக் கொண்டான். கிராப்புத் தலையை ‘ப்யூக்’ கார் மாதிரி வழ வழ வென்று வாரி விட்டுக் கொண்டான்.

கடைசியில் பார்த்தால், பையன் ஒரு பெண்ணுடன் காதல் கொண்டு விட்டான் என்பது தெரிய வந்தது.

அவன் தகப்பனார் அந்தக் காதலை விரும்பவில்லை. ஆகவே, அவரால் முடிந்த வரையில் தடுத்துப் பார்த்தார். முடியவில்லை. காதல் காட்டுத் தீ மாதிரி ‘திமு திமு’வென்று வளர்ந்து கொண்டு வந்தது.

அந்தப் பெண்ணுக்கு அந்தப் பையன் ஒரு தங்க வளை பண்ணிப் போட்டிருந்தான். அவன் தகப்பனார் இந்தச் சமாசாரத்தை யறிந்து கொண்டு, பிள்ளையிடம் கடுங் கோபங் கொண்டு சத்தம் போட்டு, உடனே அந்த வளையலைக் கேட்டு வாங்கிக் கொண்டு வந்து விடும்படி உத்தரவிட்டார்.

பையன் மிகவும் சோர்வோடு அவளிடம் போய் வளையல் சமாசாரத்தைச் சொல்ல முடியாமல் தட்டுத் தடுமாறி, ஒருவாறு சொல்லி விட்டான்.

சமீப காலத்தில் அந்தப் பெண்மணி கொஞ்சங் கொஞ்சமாகப் பருத்துக் கொண்டு வந்தபடியினால், அந்த வளை யைக் கழற்ற முடியாமற் போய் விட்டது. என் நண்பர் வளையல் விஷயத்தை விட்டுக் கொடுக்கத் தயாராயில்லை. இந்த நெருக் கடியான சமயத்தில் அவர் பிள்ளை அவ ருக்கு ஒரு யோசனையை மிகவும் தாழ்மை யோடு சொன்னான்.

"அப்பா, அவள் கையிலிருந்து வளைய லைக் கழற்ற முடியவில்லை. வெட்டி யெடுத்து விடுவோமே என்றால், அது நம் கௌரவத்துக்கு அழகல்ல. எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நான் ... அவ ளையே கல்யாணம் செய்து கொண்டு விடு கிறேன். அவளும் என்னை விட்டுப் போக மாட்டாள், வளையும் அவள் கையை விட் டுப் போகாது. நமது பொருள் நம் மிடமே வந்து விடுகிறதல்லவா?"

வேறு வழியின்றி அவர் பிள்ளை சொன்ன யோசனையை அங்கீ கரித்துக் காரியத்தில் நிறை வேற்றியும் வைத்தார்.

சிந்தனையி லிருந்து விடு பட்டு, எங்கேயாவது வெளியே போய் வரலாம் என்று எண் ணிப் புறப்பட்டேன். கொஞ்ச தூரம் சென்றதும் என் டாக்டர் நண்பர் ஞாபகம் வந்தது. அவ ரைப் பார்த்து விட்டுப் போக லாம் என்றெண்ணி உள்ளே நுழைந்தேன். நோயாளிகளின் தொந்தரவி லிருந்து விடுபட்டு அவர் அப்பொழுது கொஞ்சம் சாவகாசமாகவே யிருந்தார். என்னைப் பார்த்ததும், "வாருங் கள், உட்காருங்கள்!" என்று வரவேற்றார்.

உடனே டெலிபோன் மணி அடித்தது. டாக்டர் டெலி போனை எடுத்துக் கேட்டார். பிறகு என்னைப் பார்த்து, "ஸார், ஒரு அவசரக் கேஸ். உடனே போக வேண்டும்" என்று கூறிவிட்டுக் கோட்டை எடுத்துப் போட்டுக்கொண்டார், நானும் எழுந்தேன்.

பிறகு டாக்டர், தம் பெண்ணை அழைத்து, "சுசிலா, என் மருந்துப் பெட் டியை எடு அம்மா! சீக்கிரம்!" என்றார்.

சுசிலா வேகமாக வந்து, "ஏன் அப்பா, டெலிபோன் வந்ததா? ஏதாவது அவசரக் கேஸா?" என்று பரபரப்புடன் கேட்டுக் கொண்டே காற்றில் அசைந்தாடும் பூங் கொடி போல் வந்து நின்றாள்.

"ஆமாம், யாரோ ஒருவன் டெலிபோ னில் கூப்பிட்டான். என்னைப் பார்க்கா விட்டால் அவன் இறந்து விடுவானாம்...!" என்றார் டாக்டர்.

இதைக் கேட்ட சுசிலா, ஒரு கிஷணம் அசைவற்று நின்றாள். ஏற்கெனவே ரோஜா மலரைப் போலிருந்த அவள் முகம் மேலும் சிவந்தது.

"அப்பா......அது......எனக்கு வந்த டெலிபோன் என்று நினைக்கிறேன்...... நான்......உடனே போக வேண்டும்!" என்று கூறி விட்டு, கண்ணாடியைப் பார்த்து ஒரு முறை பவுடர் போட்டுக் கொண்டு அவசரமாகக் காரில் ஏறி மறைந்தாள்.

டாக்டர் சாவதானமாக நாற்காலியில் அமர்ந்தார். என்னையும் உட்காரச் சொன் னார். என் மனம் மீண்டும் பழைய சிந்த னையைத் தொடர ஆரம்பித்தது. எங்கே போனாலும் இந்தக் காதல் சமாசாரம்



## முக்கியம் எது?

“இதை வெண்டைக்காய் என்று வாங்கி வந்தீர்களா! அல்லது விறகுக் கட்டை என்று வாங்கி வந்தீர்களா!” என்று கேட்டாள் என் மனைவி.

ஆமாம், எனக்கு இளம் வெண்டைக் காய்க்கும் முற்றலுக்கும் வித்தியாசம் தெரிவதில்லை. அன்று தான் என் மனைவியைக் கேட்டு இளம் வெண்டைக் காயை எப்படிப் பொறுக்குவது என்று தெரிந்து கொண்டேன். நுனி உடையும் வெண்டைக்காய் இளம் வெண்டைக்காயாம்!

இன்னொரு நாள் ஒரு தேங்காய் வாங்கி வந்தேன். கனமாக இருந்தது. நிறைய பருப்பு இருக்கும் என்று நினைத்து வாங்கி வந்தேன். “இப்படி ஒரு இளநீர் வாங்கி வருவார்களோ! ஜலம் ஆடுகிற காயாகப் பார்த்து வாங்கி வரப்படாதோ” என்றாள். அதன் படியே இன்னொரு நாள் நான் ஜலம் ஆடும் காயாக வாங்கி வந்தேன். ஒரே அழுகலாக இருந்தது! எனினும் நான் சோர்ந்துவிட வில்லை. காய்கறிகள், வீட்டுச் சாமான்கள் முதலியவைகளை நன்றாகப் பார்த்து வாங்கும் நண்பன் ஒருவன் இருக்கிறான்! அவனைக் கூட அழைத்துக் கொண்டு போயாவது நல்ல வெண்டைக்காயாகவும் நல்ல தேங்காயாகவும், வெறும் பருப்பாகவும் வாங்கி வரப் போகிறேன்!

‘நண்பன்’ என்று சொன்னவுடன் ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. டேவிட் லாங்டன் என்ற ஹாஸ்யச் சித்திரக்காரர் தமது சித்திரங்களில் ஹாஸ்ய முள்ள சித்திரங்களாகப் பார்த்துப் பொறுக்குவதற்கு ஒரு யுக்தி கையாண்டார். டேவிட் லாங்டன் கையாண்ட யுக்தியைப் பற்றி அவர் நண்பரே எழுதியிருக்கிறார்—படியுங்கள்!

“டேவிட் லாங்டன் எங்கள் வீட்டுக்கு வரும் போதெல்லாம் ஒரு கட்டு ஹாஸ்யச் சித்திரங்களை என் மேஜை மீது போட்டு விட்டு, ‘இவற்றில் உனக்கு ஏதாகிலும் ஹாஸ்யமாகத் தோன்றுகிறதா!’ என்று கேட்பார். நான் அவற்றைப் பார்ப்பேன். நான் எந்த எந்தச் சித்திரத்தைப் பார்க்கும் போது என் முகத்தில் ஹாஸ்யக் குறி படருகிறது என்று கவனித்துக் கொள்வார். முதலில் இது எனக்கு ரொம்பவும் பெருமையாக இருந்தது. பிரசித்தி பெற்ற ஹாஸ்யச் சித்திரக்காரர் நம்முடைய ரஸிகத் தன்மையை இவ்வளவு மதிக்கிறாரே என்று பெருமிதம் கொண்டேன். கடைசியில், நான் எந்த எந்தச் சித்திரங்களை ஹாஸ்யமாக இருக்கிறது என்று நினைத்துச் சிரித்தேனோ அவற்றையெல்லாம் தம்மிடமே நிறுத்திக் கொண்டு மற்றவைகளை பிரசுரத்துக்கு அனுப்பி வந்தார் என்பதை அறிந்தேன். இந்த ஏற்பாடு நல்ல பலன் அவருக்கு அளித்தாலும் எனக்கு மனக்கிலேசம் அளிக்கத்தான் செய்தது!”

அடடா! இதைப் படித்துவிட்டு, என் நண்பர் நாளைக்கு வெண்டைக்காயோ முருங்கைக் காயோ வாங்க என்னுடன் வர மறுத்து விடுவாரோ என்று பயமாக இருக்கிறது! அவர் ‘நல்ல வெண்டைக்காய்’ என்று சொல்லி எடுத்துக் கொடுப்பதைத் தூர வைத்து விடுவேனோ என்று பயப்பட்டு விடப் போகிறார்! வெண்டைக்காயை விட எனக்குச் சிநேகம் தான் முக்கியம்! நீங்களே சொல்லுங்கள், உலகில் அரிய நண்பர்களை விடப் பெறக் கூடிய விஷயம் வேறு என்ன தான் இருக்கிறது!

—வெங்கு

நம்மை விடாது போலிருக்கிறது என்று நினைத்துக் கொண்டே வீட்டுக்கு வந்தேன்.

“எங்கே வெளியே போய்விட்டீர்களோ? ஆபீஸ் இல்லாத நாளில் கூட வீட்டில் தங்குவது கிடையாதா?” என்றாள் லக்ஷ்மி.

“என்ன லக்ஷ்மி, என்ன அவசரம் இன்றைக்கு? உன் ஆடை, ஆபரண, அலங்காரங்களைப் பார்த்தால், ஏதாவது ‘ப்ரோகிராம்’ இருக்கும் போலிருக்கிறதே!” என்றேன்.

“ஆமாம், நல்ல புடவையாகக் கட்டிக் கொண்டு, இருக்கிற நகையைப் போட்டுக் கொண்டால் கூட உங்களுக்குக் கேலியாக இருக்கிறது! ஆடையும் ஆபரணமும் நீங்கள் வாங்கிக் கொடுத்தால் தானே வீட்டில் நிரம்பியிருக்கும்?”

லக்ஷ்மியின் இந்தக் கேள்வியில் ஆற்றாமையும் சோகமும் கலந்திருந்தன. எக்கச்சக்கமாக எதையோ கேட்டு அகப்பட்டுக் கொண்டுவிட்டேன் என்பது எனக்கு நன்றாய்ப் புரிந்தது.

“லக்ஷ்மி, சரி, சமாசாரத்தைச் சொல்லு!” என்றேன்.

“முதலில் நீங்கள் சாப்பிட வாருங்கள்! சொல்லுகிறேன்!” என்றாள்.

நான் சாப்பிட உட்கார்ந்தேன். லக்ஷ்மி பரிமாறிக் கொண்டே, “உங்கள் அம்மாவிடம் கூடச் சொல்லிவிட்டேன். நீங்களே என்னைத் தயாராக இருக்கும்படி சொல்லி விட்டுப் போனதாகச் சொல்லியிருக்கிறேன். அம்மா கேட்டால் நீங்களும் அப்படியே சொல்லுங்கள், என்ன?” என்றாள்.

“அது சரி, லக்ஷ்மி! விஷயத்தைச் சொல்லாமல் ஏதேதோ சொல்லுகிறாயே!” என்றேன்.

உடனே லக்ஷ்மி, “விஷயத்தைச் சொல்லாமல் இருப்பேனா? உங்கள் அம்மா இராமாயணம் கேட்கப் போயிருக்கிறார். உங்கள் அக்கா, அத்திம்பேர் கூட ஊருக்குப் போயிருக்கிறார்கள். பக்கத்து வீட்டு ஜெயமும் அவள் அகத்துக்காரரும் கூட வருகிறார்கள். நாமும் இன்றைக்கு ஒருநாள் ஒரு சினிமாவுக்குப் போய்விட்டு வந்தால் என்ன?” என்றாள்.

எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. இதற்குத்தானா லக்ஷ்மி, இவ்வளவு

பிரமாதப் படுத்தினாய்? நீ என்ன சினிமாவுக்கே போனதில்லையா? எத்தனையோ படம் பார்த்திருக்கிறாயே! உன் தோழி பக்கத்து வீட்டு ஜெயாவும் நீயும் என் அம்மாவைத் துணைக்கு அழைத்துக் கொண்டு எத்தனை படங்களுக்குப் போயிருக்கிறீர்கள்......?" என்றேன்.

"சுத்த அசடாயிருக்கிறீர்களே! நான் என்ன சினிமாவே பார்க்கவில்லை என்றா சொன்னேன்? ஜெயம்சொல்லுவது சரியாயிருக்கிறது. இந்தப் புருஷர்களுக்கு மட்டும் எதுவும் சுலபத்தில் பிடிபடுகிறதில்லை. கல்யாணமாகிப் புக்ககம் வந்த ஆறு வருஷத்தில் எத்தனையோ படம் பார்த்திருக்கிறேன். உங்கள் அம்மா என்னை விட்டு விட்டு எந்தப் படத்துக்கும் போவதில்லையே! ஆனால்...நீங்களும் ... நானுமாக ஒரு படத்துக்குக்கூடப் போனதில்லை...!"

"அது சரி! படம் ரொம்ப விசேஷமான படமா?" என்று கேட்டேன்.

"படத்தில் ஒரு விசேஷமும் இல்லை. நாம் இரண்டு பேருமாகச் சேர்ந்து போவதுதான் விசேஷம்!" என்றாள் லக்ஷ்மி.

லக்ஷ்மியின் இந்தக் கடைசி வாக்கியம், மடங்கிக் கிடந்த என் பழைய சிந்தனையைப் பிரித்து விட்டது.

குடும்பத்துப் பேர்களோடு எத்தனை படம் பார்த்தும் இவளுக்குத் திருப்தி ஏற்படவில்லையே! என்னோடு படம் பார்க்க வேண்டும் என்று எத்தனை ஆவலாயிருக்கிறாள்!

சாப்பிட்டு விட்டு எழுந்ததும் சட்டை, அங்கவஸ்திர மெல்லாம் போட்டுக் கொண்டு லக்ஷ்மியோடு சினிமாவுக்குப் போகத் தயாரானேன். அப்பொழுது லக்ஷ்மியின் முகத்தில் ஏற்பட்ட சந்தோஷக் களையைப் பார்த்ததும் எனக்கும் சந்தோஷமாகத் தான் இருந்தது.

# படித்துப் பாருங்கள்!

## இந்திர ஜாலம்

இந்திரா யார்! கௌரி யார்! கோபாலசாமி யார்! கணேசன் யார்! இந்திய சிவில் சர்விஸ் யார்! இந்திய குக்கிங் சர்விஸ் யார்! யார் யாரைக் காதலிக்கிறார்கள்? யார் யாரால் காதலிக்கப்படுகிறார்கள்? — என்பதெல்லாம் முதல் 180 பக்கங்களில் வாசகர்களைத் திகைத்துத் திணறித் திண்டாட அடித்து விட்டு, கடைசியில் எதிர்பாராத விதத்தில் யார் இன்னார் என்பதைத் தெளிவாக விளங்க வைத்து மறுபடியும் வாசகர்களைத் திணறச் செய்யும் இந்திர ஜால நவீனம் இது. "வஸந்தன்" கதைகளில் நாம் எதிர்பார்க்கும் ரஸனையும் சுவையும் தமிழ் நடையின் ஓட்டமும் இந்த நூலில் பூரணமாய்ப் பொலிகின்றன. விலாசம்: தமிழ்ப் பண்ணை, தியாகராஜநகரம், சென்னை. விலை: ரூ. 2—0—0.

## குட்டிக் கட்டுரைகள்

ஆங்கிலத்தில் ரஸமான கட்டுரைகள் எழுதிப் புகழ்பெற்ற ஏ. ஜி. கார்டினர் என்ற ஆசிரியர், "ஐயா, எனக்கு இப்பொழுது ஒரு கட்டுரை எழுதியாக வேண்டும். ஆனால் எதைப்பற்றி எழுதுவது என்று தெரியாமல் விழிக்கிறேன். என் முன்னுயிருக்கிற ஒவ்வொரு பொருளும் 'என்னைப்பற்றி எழுது, என்னைப் பற்றி எழுது' என்று கேட்கிறது. நான் இவற்றில் எதைத் தேர்ந்தெடுப்பது என்று தெரியாமல்தான் விழிக்கிறேன்" என்று தம்முடைய விழிப்பையும் தவிப்பையும் பற்றியே ஒரு ரஸமான கட்டுரை எழுதித் தப்பித்துக் கொண்டு விட்டார்.

ஆனால் இந்த நூலின் ஆசிரியர் அவ்வாறு தப்பித்துக் கொள்ளவில்லை. மூட்டைப் பூச்சியிலிருந்து முழு முதற் கடவுள் வரையிலுள்ள அனந்த கோடி விஷயங்களில் பதினாறு விஷயங்களைப்பற்றிக் கட்டுரைகள் புனைந்திருக்கிறார். கட்டுரைகளில் இதன் ஆசிரியர் ஆங்கிலக் கல்வியும் தமிழ்ப் பாண்டித்தியமும் பெற்றவர் என்பது நன்கு வெளியாகிறது.

ஆசிரியர்: வித்வான் க. சுப்ரமணியன் எம். ஏ; கிடைக்குமிடம்: 65, நாகப்பைய்யர் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை விலை: ரூ. 1—8—0.

## போகாத பேச்சு

சோற்றுப் பஞ்சம், வீட்டுப் பஞ்சம், துணிப் பஞ்சம் இப்படி எல்லாப் பஞ்சப் பேய்களும் நாட்டில் தலைவிரித்தாடும்போது ஒரே ஒரு விஷயம் மட்டும் பஞ்சமின்றி அபரிமிதமாக இருக்கிறது. அதுதான்—பேச்சு.

மந்திரிகள் பேசுகிறார்கள், தந்திரிகள் பேசுகிறார்கள். முதலாளிகள் பேசுகிறார்கள், தொழிலாளிகள் பேசுகிறார்கள். ஆஸ்திகர்கள் பேசுகிறார்கள், நாஸ்திகர்கள் பேசுகிறார்கள். பத்திரிகையைப் புரட்டினால் எத்தனை பேருடைய பேச்சுக்கள் வெளியாகின்றன!

இந்த நிலைமையில் திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள், ஆதிகாலத்தில் ஆதிசிவன் ஆலமரத்தின் நிழலுக்குச் சென்று ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் அருமறைகளை நால்வருக்குப் போதித்தார் என்பதை நினைவூட்டுகிறார். கிருஷ்ண பரமாத்மா ஜராசந்தன் வதையைக் குறிப்பால் நிகழ்த்தினார் என்பதை ஞாபகப் படுத்துகிறார். பதங்கள் சாதாரணமாக உணர்த்தாத பொருள்களை எல்லாம் ஒரு பெண் அபிநயங்கள் வாயிலாக உணர்த்தி விடுகிறாள் என்பதையும் எடுத்துச் சொல்லுகிறார். இப்படிப் போகாத பேச்சின் சக்தியை இப்புத்தகத்தில் வெகு லளிதமாக விளக்குகிறார்.

[பிரசுரம்: அமுதநிலையம் லிமிடெட்; தேனாம்பேட்டை, சென்னை, விலை: ரூ. 2—8—0.]

# மத்தியகேந்திரம்

ஜெயமணி

மூவாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் எகிப்தை ஆட்சி புரிந்த ஹட்ஷிப்ஸத் ராணியினால் நிர்மாணிக்கப்பட்ட ஆலயம். இது மலைப்பாறைகளில் குடைந்து உருவாக்கப்பட்டது.

## எகிப்து—5

முதலாவது உலக மகாயுத்தம் முடிந்து 1918—ம் வருஷத்தில் சமாதானம் ஏற்பட்டது அல்லவா? அதிலிருந்து எகிப்திலே பிரிட்டிஷ் துருப்புகளின் அட்டகாசமும் குறைந்தது. எகிப்து தேசியவாதிகள் மீண்டும் தலை தூக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் எகிப்தின் சுதந்திர உரிமையை வற்புறுத்தி, பிரிட்டிஷ் சர்க்காரிடமும் பாரிஸ் சமாதான மகாநாட்டிலும் சமர்ப்பிப்பதற்காக ஒரு திட்டத்தையும் தயாரித்தனர்.

அக்காலத்தில் எகிப்தில் அரசியல் கட்சிகள் எதுவும் இல்லை. எகிப்தின் சுதந்திரத்தை வற்புறுத்துவதற்காக ஜக்லுல் பாஷாவின் தலைமையில் ஒரு தூது கோஷ்டியை லண்டனுக்கும் பாரிசுக்கும் அனுப்புவதென்று தேசிய வாதிகள் தீர்மானித்தனர். அப்போதுதான் பிற்காலத்தில் பிரசித்தி பெற்ற வப்துக் கட்சி ஆரம்பிக்கப் பட்டது. தூது கோஷ்டி அங்கத்தினர்களை மேற்படி கட்சியிலிருந்தே தேர்ந்தெடுத்தனர். அந்தக் கோஷ்டி தேசத்தின் பிரதிநிதித்துவம் வாய்ந்ததாக விளங்க வேண்டும் என்பதற்காகவே அவ்வாறு செய்தனர்.

'வப்து' என்றால் எகிப்திய பாஷையில் தூது என்று அர்த்தம். சுதந்திரத்தை ஈட்டி வருவதற்காக எகிப்தியத் தலைவர்கள் தூது செல்ல உத்தேசித்ததால் அவர்கள் கட்சிக்கு வப்துக் கட்சி என்ற பெயர் வழங்கலாயிற்று.

எனினும் ஜக்லுல் பாஷா கோஷ்டியினர் லண்டன் செல்வதை அனுமதிக்க முடியாது என்று பிரிட்டிஷ் சர்க்கார் மறுத்து விட்டார்கள். மறுத்ததுடன் நில்லாமல், ஜக்லுல் பாஷாவையும் மற்றத் தலைவர்களையும் கைது செய்து சிறைப்படுத்தி விட்டார்கள்.

பிரிட்டிஷ் சர்க்காரின் செய்கை மருந்துக் குவியலில் தீப்பொறி தெறித்தது போலா

யது. தலைவர்கள் சிறைக்குச் செல்ல நேர்ந்ததைக் கண்டதும் எகிப்திய மக்கள் கொதித்து எழுந்தனர். கோரமான புரட்சி பீறிட்டுக் கொண்டது. பல பிரிட்டிஷார் கொல்லப்பட்டனர். தலைநகரான கெய்ரோவும் மற்றும் சில பிரதேசங்களும் புரட்சிக்காரர்களின் வசமாயின.

அந்தப் புரட்சியில் பெரும்பாலான சர்வ கலாசாலை மாணவர்களும் பங்கு எடுத்துக் கொண்டார்கள்.

தேசிய வாதிகள் ஆரம்பத்தில் வெற்றி பெற்றார்கள். எனினும் அவர்களின் புரட்சியைப் பிரிட்டிஷார் தங்களுடைய கொடிய ஆயுத பலத்தைக் கொண்டு சுலபமாக நசுக்கி விட்டனர்.

பிறகு எகிப்தியர்கள் தங்களுடைய தவறை உணர்ந்து பலாத்கார மற்ற எதிர்ப்பைக் கைக்கொண்டார்கள்.

பலாத்கார எதிர்ப்பை வெகு எளிதில் அடக்கி வெற்றி கொண்ட பிரிட்டிஷார் எகிப்தியர்களின் சாத்வீக எதிர்ப்பைச் சமாளிக்க முடியாமல் தவித்தனர். எகிப்திய மக்களின் சுதந்திர அபிலாஷையை ஓரளவாவது பூர்த்தி செய்தாலன்றித் தாங்கள் எகிப்தில் அமைதியாக இருக்க முடியாது என்ற உண்மையையும் உணர்ந்தார்கள்.

அதன் பலனாக லார்டு மில்னர் தலைமையில் இங்கிலாந்திலிருந்து எகிப்துக்கு ஒரு கமிஷன் அனுப்பப் பட்டது. இந்தியர்களின் கண்களைத் துடைப்பதற்காகச் சைமன் கமிஷன் இந்தியாவுக்கு வந்தது அல்லவா? அது போலவே மில்னர் கமிஷனும் எகிப்துக்கு வந்தது. அந்தக் கமிஷனை எகிப்திய மக்கள் ஏகோபித்து பகிஷ்கரித்தனர். அவர்களுடைய பகிஷ்காரம் பூரண வெற்றி பெற்றது.

* * *

எனினும் எகிப்தியர்களின் மன நிலையையும் தீவிரமான எதிர்ப்பையும் நேரில் பார்த்த மில்னர் கமிஷன், தன் அறிக்கையில் அவர்களுக்குச் சாதகமாகவும் நியாயமாகவும் பல சிபார்சுகளைச் செய்திருந்தது. ஆனால் பிரிட்டிஷ் சர்க்கார் அந்தச் சிபார்சுகளை ஏற்றுக் கொள்ளவில்லை.

எனவே, எகிப்தின் சுதந்திரப் போராட்டம் தொடர்ந்து நடந்து வந்தது. பூரண சுயாட்சிக்குக் குறைந்த எந்த அரசியல் ஏற்பாட்டையும் ஒத்துக் கொள்ள முடியாது என்று எகிப்தியர்கள் உறுதியாகக் கூறி விட்டார்கள்.

முதலில் கைதியாகி விடுதலை அடைந்த ஜக்லுல் பாஷா மறுபடியும் கைதியாகி, நாடு கடத்தப்பட்டார். அவர் பிரிட்டிஷாருடன் சமரசம் செய்து கொள்ள விரும்புகிறார் என்று எகிப்தில் சில சதிகாரர்கள் அவரைக் கொன்று விடவும் முயன்றார்கள். ஆனால் அதிர்ஷ்டவசமாக அவர் உயிர் தப்பினார்.

கடைசியாக, 1922-ம் வருஷத்தில் பிரிட்டிஷார் எகிப்தின் சுதந்திரத்தை அங்கீகரிப்பதாகப் பிரகடனம் செய்தனர். எனினும் அதற்காக அவர்கள் விதித்த நிபந்தனைகள், மேற்படி சுதந்திரம் வெறும் கேலிக் கூத்து என்பதை உலகத்துக்குப் பறை சாற்றின.

அவ்வாறு சுதந்திரப் பிரகடனம் விடுத்த பிறகும் பிரிட்டிஷ் அதிகாரிகள் எகிப்தில் ராணுவச் சட்டம் பிறப்பித்தார்கள் எனில், எகிப்தியர் பெற்ற சுதந்திரத்தின் தன்மையை ஊகித்துக் கொள்ளலாம்!

'சுதந்திர' எகிப்தைப் பிரிட்டிஷாரின் இஷ்டப்படி ஆட்சி புரிவதற்கு புவாட் மன்னர் வந்து சேர்ந்தார். புவாட் மன்னர் அவருடைய ஆட்சிக் காலத்தில் எகிப்து பார்லிமெண்டை எவ்வளவு தடவை கலைத்தார் என்பதைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது! அவர் உண்மையில் பிரிட்டிஷாரின் அபிப்பிராயத்துக்கு இணங்க எகிப்தை ஆட்டி வைக்கும் சர்வாதிகாரியாகவே விளங்கினார்.

பிரிட்டிஷார் எகிப்துக்குச் 'சுதந்திரம்' அளித்தது அவர்களுக்கு இரண்டு விதத்தில் நன்மையாக முடிந்தது. 'சுதந்திர' எகிப்தை அவர்கள் தங்கள் கைப் பொம்மையாக இருந்த எகிப்து மன்னர் மூலம் ஆட்டிவைப்பது சாத்தியமாயிற்று. இரண்டாவதாக, 'சுதந்திர' எகிப்து சர்க்காரிலிருந்து விலகும் பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு ஏராளமான தொகை கொடுப்பதற்கும் அரிய சந்தர்ப்பம் கிடைத்தது.

அப்போது விலகிய அதிகாரிகளுக்கு உதவியாக எகிப்து சர்க்கார் அறுபத்தைந்து லட்சம் பவுன் கொடுக்க வேண்டியிருந்தது. சில அதிகாரிகளுக்குத் தலா சற்றேறக்குறைய ஒன்பதாயிரம் பவுன் விகிதம் கிடைத்தது என்றால், எகிப்தின் அத்தகைய சுதந்திரத்தைப் பிரிட்டிஷ் அதிகாரிகள் தங்களுடைய வரப் பிரசாதமாகவே கருதி வரவேற்றிருப்பார்கள் என்பது நிச்சயம்!

இதில் விநோதமான விஷயம் என்னவெனில், அவ்வாறு விலகிய பிரிட்டிஷ் அதிகாரிகளில் பலர் சிறிதும் தாமதமின்றி புதிய ஒப்பந்தம் செய்து கொண்டு மறுபடியும் எகிப்து சர்க்கார் உத்தியோகங்களிலேயே நுழைந்து கொண்டதுதான்!



# நர்ஸ் நிர்மலா

ஆசிரியர்: கமல் ஜோஷி

மொழிபெயர்ப்பு: ரா. வீ.



( சென்ற வாரத் தொடர்ச்சி )

முதன் முதலாக நிர்மலா அந்த வீட்டுக்கு வந்தபொழுது இந்த வீட்டிலும் ஒரு மனிதன் இருக்க முடியும் என்ற எண்ணமே அவளுக்கு எழவில்லை. நாற்புறமும் ஒரே குப்பையும் கூளமுமாகக் கிடந்தது. ஒரு இடத்தில் பத்துப் பாத்திரங்கள் கிடந்தன. இன்னொரு 'ரூமி'லில் கழைத்துப் போட்ட துணிகள் நாதியற்றுக் கிடந்தன. இப்படி வீடு ஒரே கந்தர்கோளமாக இருந்தது. சமையல் அறையிலிருந்து 'ஸ்டவ்' எரிந்து கொண்டிருந்த சத்தம் வந்தது. அவள் எட்டிப் பார்த்தாள். ஹரிப் பிரஸாத் சமையல் செய்து கொண்டிருந்தான். பக்கத்தில் ஒரு பலகையைப் போட்டுக்கொண்டு அவன் பெண் ஸியாமளா உட்கார்ந்திருந்தாள். சமையல் அறை முழுவதும் அரிசியும் பருப்பும் சிதறிக் கிடந்தன.

உள்ளே நுழைந்த நிர்மலா ஸியாமளா கை விரலை அழுத்திப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பதையும், அவள் விரலிலிருந்து 'குபு குபு' வென்று ரத்தம் பெருகி ஓடி வருவதையும் கண்டாள். அடுத்த நிமிஷம் பறந்து விழுந்து கொண்டு அவளிடம் ஓடினாள். பிறகு "இவள் இப்படி விரலை நறுக்கிக் கொள்வானேன்!" என்று காயத்துக்குக் கட்டுக் கட்டிக்கொண்டே கேட்டாள் நிர்மலா.

"கறி நறுக்கினாள். காயம்பட்டு விட்டது!" என்றான் ஹரிப்பிரஸாத். அதைக் கேட்டதும் அவள் இரண்டு கண்களும் ஆச்சரியத்தினால் அகல விரிந்தன.

"நீங்கள் ரொம்பப் புத்திசாலி தான்! நாலு வயதுக் குழந்தையை யாராவது கறி நறுக்கச் சொல்லுவார்களா!"

ஹரிப்பிரஸாத் லேசாகச் சிரித்தான். "நான் என்ன செய்வது! அரிசி கொதித்துப் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. இதோ பாருங்கள்! என் காலில் கஞ்சி வழிந்து கொப்புளித்திருப்பதை!" என்று சொல்லித் தன் கால் கொப்புளத்தை நிர்மலாவுக்குக் காட்டினான்.

"எதற்காக நீங்கள் சமைக்க வேண்டும்! ஏதாவது ஒரு ஹோட்டலில் ஏற்பாடு செய்யக் கூடாதோ! இல்லையென்றால் ஒரு சமையற்காரனோ, சமையற்காரியோ வைத்துக் கொள்வதுதானே! ஆமாம், உங்களுக்கு யாராவது நெருங்கிய உறவினர்கள் இல்லையோ, இங்கே வந்து குடும்பத்தைக் கவனித்துக் கொள்வதற்கு!" என்று கேட்டாள் நிர்மலா.

"யாரும் இல்லை! தன் வீட்டை விட்டு விட்டு யார் இங்கே வருவார்கள்! ஹோட்டலில் ஏற்பாடு செய்யலாம் என்றாலோ அதற்கு ரொம்ப ரொம்ப ரூபாய் வேண்டும். அத்தனை ரூபாய்க்கு நான் எங்கே போவது! கிடைப்பது இருநூறுதான். வேலைக்காரி, ஹோட்டல் என்றால் அதற்கெல்லாம் எங்கிருந்து பணம் வரும்! உங்களுக்கும் வேறு......!" ஹரிப்பிரசாத் நெற்றி வியர்வையைத் துடைத்துக்கொண்டு, "......கொஞ்சமாவது கொடுக்க வேண்டாமா!" என்றான்.

மத்தியானம் ஹரிப்பிரஸாத் வெளியே போனதும் நிர்மலா வீட்டைச் சுத்தம் செய்யும் வேலையில் ஈடுபட்டாள். சின்னக் குழந்தையும் அழாமல் படுத்தாமல் படுத்துக் கொண்டிருந்தது. கட்டிலில் கிடந்த அழுக்கேறிய துணிகளையெல்லாம் எடுத்து ஒரு காகிதத்தில் சுற்றிக்கொண்டு சலவைக்குப் போட எண்ணினாள். அவளுக்குப் பின்னாலேயே ஹரிப்பிரஸாதின் பெண் வியப்பும் ஆச்சரியமும் தாண்டவமாடச் சுற்றிக் கொண்டிருந்தாள்.

"என் பாப்பா! உன் பெயர் என்ன!"

"என் பேரா! என் பேர் சாமளா!" என்றாள் அந்தப் பெண்.

"பேஷ்! அழகான பெயரா யிருக்கிறதே!"

"ஆமாம், என் பேரு நல்ல பேரு!"

"அது சரி, உன் தம்பி பெயர் என்ன!" என்று சிறிது நேரம் கழித்துக் கேட்டாள்.

"கைலாஸம்!" என்றாள் அந்தப் பெண்.

நிர்மலாவுக்கு அந்த இரண்டு பெயர்களும் மிகவும் பிடித்திருந்தன.

கிட்டத்தட்ட மூன்று மாதங்கள் நிர்மலா சம்பளம் வாங்கிக்கொண்டு ஹரிப்பிரஸாதின் வீட்டில் நர்ஸ் வேலை பார்த்து வந்தாள். மாதம் முப்பத்தைந்து ரூபாய்தான் கிடைத்து வந்தது. அந்த ரூபாய்க்கு அவள் எவ்வளவோ அதிக

மாகத்தான் வேலை செய்தாள். சியாமளாவுக்கு 'அ ஆ' சொல்லிக் கொடுப்பதிலிருந்து ஹரிப் பிரஸாதின் சட்டைக்குப் பித்தான் போட்டு வைக்கும் வேலைவரை அவளேதான் கவனித்து வந்தாள். வேலை முடிந்து ஆஸ்பத்திரிக்குப் போக நேரமாகா விட்டால் காப்பி போட்டுச் சாப்பிட்டு விட்டுப் போவாள். நேரம் ஆகி விட்டால் அதுவும் இல்லை. இரண்டு தாயில்லாக் குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டதனால் ஹரிப் பிரஸாதுடன் மனம் விட்டுப் பழகும் சந்தர்ப்பம் அவளுக்குக் கிட்டியது.

மூன்று மாதகாலமாக ஒருநாள் விடாமல் இருவரும் ஒருவரை யொருவர் சந்தித்திருக்கின்றனர். இருவருக்கும் ஒருவரை யொருவர் பிடித்திருந்தது. ஆனால் உள்ளத்திலே காதல் பித்து வேரூன்றி விட்டது என்னும் விஷயம் இவ்வளவு நாட்களாகியும் ஒருவருக்கு ஒருவர் தெரியாமலிருந்தது ஆச்சரியந்தான்.

அன்று சியாமளாவையும் கைலாசத்தையும் வைத்துக்கொண்டு, அவர்கள் கொட்டத்தைக் கண்டு ஹரிப்பிரசாத் ரஸித்துக் கொண்டிருந்தான். அதே சமயம் நிர்மலா உள்ளே நுழைந்தாள். அவளைக் கண்டதும் அவன் கண்களிலே அலாதி ஒளி வீசிற்று.

“நீங்கள் வந்த பிறகு என் சிரமங்கள் எவ்வளவு குறைந்து விட்டன, தெரியுமா!” என்று சொல்வது போலவோ, 'இன்று ஏன் இவ்வளவு நாழிகை!' என்று கேட்பது போலவோ அவன் கண்கள் அவளை நோக்கின.

நிர்மலா அதையெல்லாம் அவ்வளவாகக் கவனிக்கவில்லை. அதைக் கவனிக்க அவளுக்குப் பொழுது எங்கே இருந்தது!

நிர்மலா சிறு பிராயத்தில் தூரபந்து ஒருவர் வீட்டில் வளர்ந்தவள். பெரியவள் ஆனதும் பெரியவளாகி விட்டோமே என்ற வெட்கத்தினால் பிறர் முகத்தில் அதிகம் விழிக்காமலேயே வளர்ந்தவள். படைத்த பிரமன் அவளைப் பிரமாதமான அழகியாகவும் படைக்கவில்லை. ஆகவே, அவளைக் கல்யாணம் செய்து கொள்ள வந்தவர்களின் எண்ணிக்கை மிக மிகக் குறைவாகவே இருந்தது.

இதன் மத்தியில் அவள் 'நர்ஸிங் கோர்ஸி'ல் சேர்ந்து படித்துத் தேறிவிட்டாள். அதிர்ஷ்ட வசமாகத் தேறிய உடனேயே அவளுக்கு ஒரு வேலையும் கிடைத்துவிட்டது. பதினெட்டாவது பிராயத்திலிருந்து இருபத்தைந்தாவது பிராயத்தை அடைந்து விட்டாள் இந்த ஏழெட்டு வருஷத்து வாழ்க்கையும் ஒரேவிதமாக ஓடி விட்டது. ஆபரேஷன் மேஜை யருகில் முகமூடி அணிந்து கொண்டு நிற்பது, ஆபரேஷன் ஆனவர்களின் கூச்சல், புதிதாகப் பிறந்த குழந்தைகளின் அழுகை, 'டிஸ் இன்பெக்டெண்ட் லோஷ'னின் வாசனை.—இதிலேயே அவளுடைய வாழ்க்கையின் இவ்வளவு நாட்களும் ஓடி விட்டன.

இந்தக் கட்டுப்பாடு நிறைந்த வாழ்க்கையில் அவள் சில சமயம் சோர்வுற்றதும் உண்டு. ஆனால் இதுவரை மனம் சஞ்சலத்தில் ஆழ்ந்த நாட்களே கிடையாது. இரண்டொரு கற்றுக் குட்டி டாக்டர்களின் கண் வீச்சுக்கு இலக்காகிக் கடிந்து எரிந்து விழுந்திருக்கிறாள். சில ஊர் சுற்றிக் காவாலிகளும் உயர்தரப் போக்கிரிகளும் 'டெலிபோன் டைரக்டரி'யில் நம்பரைப் பார்த்து இரவு வேளைகளில் போன் செய்து அவளைச் சிரமப்படுத்தி யிருக்கிறார்கள். காமமே கண்ணான இரண்டொரு தொழில் தெரிந்தவர்கள் இரவு வேளைகளில் மோட்டாரில் வந்து 'நர்ஸிங் குவார்ட்டரு'க்கெதிரே நிறுத்தி 'ஹார்ன்' அடித்து விட்டுப் போயிருக்கிறார்கள். இந்த அநுபவங்கள் எல்லாம் அவளுக்குப் பழகிப் பழகிப் பொறுமையை உண்டு பண்ணி யிருந்தன.

இதைத் தவிர வாழ்க்கையில் அவளுக்குப் நெருங்கித் தொடர்பு பூணக் கிடைத்தவர்களில் முக்கியமாக ஹரிப் பிரசாத் ஒருவனைத் தான் சொல்ல வேண்டும்.

தினசரி சந்திப்பதுதான் நெருங்கிய தொடர்புக்குக் காரணம் என்றால் அதற்கு ஒரு அர்த்தம் தான் கொள்ள வேண்டும். ஆனால் அந்த அர்த்தத்தையும் தாண்டி வேறு ஒரு அர்த்தம் இருக்கக்கூடும் என்பது டாக்டர் திரிவேதி அவளைக் கூப்பிட்டு அனுப்பிய பிறகுதான் அவளுக்குத் தெரிய வந்தது.

நிர்மலா தினந்தோறும் ஹரிப்பிரசாதின் வீட்டுக்குப் போய் வருகிறாளா என்பதை டாக்டர் திரிவேதி அறிய விரும்பினார்.

நிர்மலாவுக்கு அவர் அபிப்பிராயம் புரியவில்லை. ஆனால் அவளுக்குப் பொய் சொல்லவும் நா எழவில்லை. ஆகவே, உண்மையை ஒப்புக் கொண்டாள்.

“எதற்காகப் போகிறாய்!”

“அவருடைய சின்னஞ் சிறு குழந்தைகளைப் பார்த்துக் கொள்வதற்காக!”

“இதற்காக உனக்கு ஏதாவது சம்பளம் கிம்பளம் கிடைக்கிறதா!”

நிர்மலா, சம்பளம் வாங்குவது உண்டு என்பதை ஒப்புக் கொண்டாள்.

“இது ஆஸ்பத்திரியின் சட்டதிட்டங்களுக்கு நேர்மாறானது என்பது உனக்குத் தெரியுமா! இங்கே வேலை பார்க்கும் ஆசாமிகள் வெளியே எவ்விதமான வேலையோ, தொடர்போ வைத்துக் கொள்ளக்கூடாது. நான் நினைத்தால் இப்போதே உன்னை வேலையிலிருந்து நீக்கிவிடலாம். ஆனால் இந்தத் தடவை உன்னை எச்சரிப்பதோடு மட்டும் விட்டு விடுகிறேன். ஆகவே, அந்த வேலையை விட்டு விடு” என்றார் டாக்டர்.

சாயந்திரம் காப்பி சாப்பிடும்பொழுது நிர்மலா ஹரிப்பிரசாதைப் பார்த்து, “உங்கள் வீட்டில் நான் வேலை செய்வது இன்றுதான் கடைசி நாள்” என்றாள்.

“கடைசி நாளா! ஏன்!” என்று கேட்டான் ஹரிப்பிரசாத். அப்பொழுது அவன் கையிலிருந்த காப்பி டம்ளர் ஆடியது. அதைக் கண்டு நிர்மலா நடுங்கினாள். பிறகு ஹரிப்பிரஸாதிடம் ஆஸ்பத்திரியில் நடந்த விஷயத்தை விவரமாகச் சொன்னாள்.

“ஆகவே, நாளையிலிருந்து நான் உங்கள் வீட்டுக்கு வர முடியாது!” என்றாள் நிர்மலா.

“நாளையிலிருந்தேயா!” என்று கேட்ட வண்ணம் ஹரிப்பிரஸாத் எழுந்திருந்தான். பிறகு மேஜை டிராயரைத் திறந்து பணத்தை எடுத்து, “அப்படியானால் இன்றைக்கே உங்கள் பாக்கிச் சம்பளத்தை வாங்கிக்கொண்டு போய் விடுங்கள்!” என்று சொன்னான்.

நிர்மலா கையை நீட்டிப் பணத்தை வாங்கிக் கொண்டாள். அதை வாங்கிக் கொள்ளும் பொழுது அவள் கை நடுங்கியது.

"எண்ணிப் பாருங்கள்!" என்றான் ஹரிப் பிரஸாத் வறண்டு போன குரலில். பிறகு, "இந்த நாளில் பொய் நோட்டுக்கள் ரொம்ப உலாவுகின்றன" என்றான் பித்தனைப் போல.

இந்தத் தடவை கைமட்டும் அல்ல; நிர்மலாவின் இரு கண் இமைகளும் கூட அசைந்தன. அடுத்த கணம் கண்களில் நீர் முட்டியது. அப்படியே மேஜையில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அப்பொழுது தான் அவளுடைய உள்ளத்தின் கனம் வெளிப்பட்டது.

ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு, ஹரிப்பிரஸாத், "நிர்மலா, நீ ஆஸ்பத்திரி வேலையை விட்டு விடேன்!" என்றான்.

நிர்மலா பதில் சொல்ல முயன்றாள். ஆனால் அவள் வாய் அடைத்து விட்டது. நீர் நிறைந்த தன் கண்களை நிமிர்த்தி ஹரிப்பிரஸாதையே ஊன்றிக் கவனித்தாள். அடுத்த நிமிஷம் இருவர் கண்களும் ஆஸ்பத்திரி வேலையை விட்டு விட வேண்டியதுதான் என்று ஒரு நிச்சயமான முடிவுக்கு வந்து விட்டன.

★

மூன்று நாட்களுக்குப் பிறகு ஸியாமளா வந்தாள். அவளுக்கு நிர்மலாவைத் தெரியும். ஆனால் தன் தாய் என்ற முறையில் அல்ல. ஆகவே, சந்தேகத்துடன் பார்த்தவாறே சற்றுத் தூரத்தில் நின்று கொண்டிருந்தாள்.

நிர்மலா அவளை அருகில் கூப்பிட்டாள். "ஏன், ஸியாமளா! என்னைத் தெரியவில்லையா! இனிமேல் நான் உங்களுடனேயே இருக்கப் போகிறேன். நான் தான் உங்களுக்கு அம்மா; புது அம்மா!" என்றாள்.

ஸியாமளா சிறிது நேரம் அப்படியே நின்று கொண்டிருந்தாள். பிறகு, "நீ ஒன்றும் எங்கள் அம்மா இல்லை!" என்றாள்.

ஸியாமளாவைச் சமாதானப் படுத்தித் தன் அருகில் அழைக்க நிர்மலாவுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. விளையாட்டில் ஸியாமளாவின் மரப்பாச்சிக்குக் கல்யாணம் செய்து வைக்கும் முழுப் பொறுப்பையும் நிர்மலா ஒரு நாள் ஏற்றுக் கொண்டாள். அன்று முதல் ஸியாமளா நிர்மலாவுடன் இழைந்து இணைபிரியாதவளாகவே ஆகிவிட்டாள். தாயும் - மகளும் இவ்வளவு ஒற்றுமையாகி விட்டதைக் காண ஹரிப்பிரஸாதுக்கே வியப்பாயிருந்தது.

முன்பெல்லாம் ஆஸ்பத்திரி வேலை முடிந்த பின் நிர்மலாவுக்கு இங்கே வந்து எல்லா வேலைகளும் செய்யும்படியாக இருந்தது. அதனால் என்ன செய்தும் வேலை சிறக்கவில்லை. அரைகுறையாகவேதான் இருந்தது. ஆனால் இப்பொழுதோ குடும்பமே அவளுடையது; முழுப் பொறுப்பும் அவளுடையது. கறிகாய் வாங்குவதற்குக் கணக்காகக் காசு கொடுக்கிறாள். விளக்கு வீணாக எரிவதில்லை. வீட்டில் துவைத்துக் கட்டிக் கொள்ளும்படியான துணிகளை அவள் சலவைக்குப் போடுவதில்லை. குடும்பக் காரியங்கள் செட்டும் கட்டுமாக கனகச்சிதமாக நடக்கலாயின.

ஹரிப்பிரஸாத் இதையெல்லாம் கவனித்தான். முன்பெல்லாம் பாதி க்ஷவரம் செய்து கொண்டிருக்கும் பொழுது குழந்தைகளைக் கவனிக்க வேண்டியிருக்கும். சமையலறைப் புகையில் இரண்டு மணி நேரம் கண்களைக் கசக்கிக் கொண்டு உட்கார்ந்து வெந்ததும் வேகாததுமாகச் சமையலைச் செய்து கீழே இறக்கி அவசரம் அவசரமாகச் சாப்பிட்டு விட்டு ஆபீஸுக்கு ஓடவேண்டியிருக்கும். இப்பொழுது அந்த நாட்கள் துயரம் கலந்த கனவுகள் மறந்து மறைந்து போவது போல மறைந்து விட்டன.

இப்பொழுதெல்லாம் சின்னக் குழந்தைக்கு ஏதாவது உடம்பு சரியில்லை என்றால் முன்னைப் போல டாக்டரிடம் ஓடவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. வீட்டோடு தான் தேர்ச்சி பெற்ற நர்ஸ் ஒருத்தி வந்து விட்டாளே!

நிர்மலா சமையல் அறையில் வேலை செய்து கொண்டிருந்தால் ஹரிப்பிரஸாத் கூடத்தில் உட்கார்ந்தபடியே அவள் வேலை செய்யும் பணிக்கைப் பார்த்து ரஸித்துக் கொண்டிருப்பான். பாத்திரம் தேய்ப்பதற்கு ஒரு வேலைக்காரி மட்டும் இருந்தாள். பாக்கி வேலைகளையெல்லாம் நிர்மலாவே கவனித்து வந்தாள். நெருப்பு அவள் கையைச் சுடுவதில்லை. தண்ணீர் ஜலதோஷத்தை வருவிப்பதில்லை. நிர்மலா நல்ல ஆரோக்கியசாலியாகவும் அறிவிற் சிறந்தவளாகவும் இருந்தாள்.



லீலாவும் அடக்கமாகத்தான் இருந்தாள். ஆனால் குடும்பத்தை நிர்வகிப்பதில் நிர்மலாவைப் போல் அவள் அவ்வளவு கெட்டிக்காரியில்லை. வரும் வரும்படியை எல்லாம் ஊதி எரிந்து விடுவதுதான் அவள் வழக்கமாயிருந்து வந்தது. குளிர் காலத்தில் எப்பொழுது பார்த்தாலும் ஏதாவது ஒன்றுக் கொன்று உடம்பு. அவள் இருந்த காலத்தில் மாதா மாதம் மருந்துபில் ஏறிக் கொண்டே போகும். சலவைக்கும் மூட்டை மூட்டையாகத் துணிகள் போகும்.

உண்மையைக் கேட்டால் அந்த நாளில் அவனுக்குக் கிடைக்கும் இருநூறு ரூபாய் சம்பளம் போதவே இல்லை. மாதா மாதம் இருபது இருபத்தைந்து ரூபாய் பற்றுக் குறையாகவே இருந்து வந்தது. கடனும் விஷம் போல ஏறிக் கொண்டே போயிற்று.

லீலா ஆஸ்பத்திரியில் இருந்த பொழுது ஹரிப் பிரஸாத் தன் காரியாலயத்து நண்பர்களிடம் கடன் வாங்கியிருந்தான். சீக்கிரம் சம்பள உயர்வு கிடைக்கும் போலிருந்தது. ஆனால் அந்தச் சம்பள உயர்வைக் கொண்டு கடனை அடைத்துவிட முடியுமா என்பது சந்தேகமாகத்தான் இருந்தது.

நிர்மலா எல்லாவற்றையும் சரிக்கட்டிக் கொண்டு போவாள் என்பதை ஹரிப்பிரசாத் நன்கு உணர்ந்திருந்தான். குடும்பச் செலவைக் குறைத்து அவள் இரண்டு மாதத்துக்குள் ஜன்னல்களுக்கு இரண்டு புதுப் படுதாக்கள் வாங்கிப் போட்டிருந்தாள். சியாமளாவுக்கு உடம்பு சரியில்லாமலிருந்த பொழுது இரவு - பகல் எந்நேரமும் அவளே அருகில் இருந்து கவனித்து வந்தாள். லீலா இருந்த காலமாயிருந்தால் டாக்டர் பீஸ், மருந்துச் செலவு என்று குறைந்தது முப்பது நாற்பது ரூபாயாவது கையை விட்டுக் கரைந்திருக்கும்.

இரு நூறு ரூபாய்ச் சம்பளம். குடும்பத்துக் கேற்ற ஒரு மனைவி. இரண்டு குழந்தைகள். ஒன்று பெண், மற்றொன்று ஆண். வாழ்க்கையின் தேவை அனைத்தும் நிறைவேறியிருந்தது. நான்கு ஜீவன்கள் வாழும் குடும்பம் நன்றாக உண்டு உடுத்தி வாழ முடியும். இதைவிட இன்னும் எண்ணிக்கை அதிகரித்து விட்டால்......! அப்புறம் செலவுக்கு எங்கே போவது! ஆகவே ஹரிப்பிரஸாதின் எண்ணம் என்ன வென்றால் இனிமேல் குடும்பம் வளர்ந்து பெருகிவிடக் கூடாது என்பதுதான்.

ஒரு நாள் பிரபா அவர்களைப் பார்க்க வந்திருந்தாள். அப்பொழுது ஹரிப்பிரஸாத் வீட்டில் இல்லை.

"மன்னி! சாமான்களை நர்விசாக அடுக்கி அழகாக வைத்திருக்கிறாயே!" என்றாள் பிரபா.

அப்பொழுது நிர்மலா சின்னக் குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு அதன் கண்களுக்கு மை தீட்டிக் கொண்டிருந்தாள். அவள் நாணம் கலந்த ஒரு புன் சிரிப்பை மட்டுமே பிரபாவின் கேள்விக்குப் பதிலாக அளித்தாள்.

"நீ ஒரு நல்ல குடும்பத்துப் பெண்ணாகவே ஆகிவிட்டாயே! இவ்வளவு நாட்கள் ஆஸ்பத்திரியில் இருந்தவள் இதெல்லாம் எங்கே கற்றுக் கொண்டாய்!"

"இதெல்லாம் கற்க வேண்டுமா! தன்னாலே வருகிறது!"

"ஆமாம், என் மன்னி! உன் முகம் ஏன் இப்படி வெளுத்துப் போய்க் கிடக்கிறது! உடம்பு—கிடம்பு சரியில்லையா, என்ன!" என்று கேட்டு விட்டு நிர்மலாவைப் பிரபா



கூர்ந்து கவனித்தாள். நிர்மலா நாணிக்கோணிக்கொண்டு, "இல்லையே! உடம்பு நன்றாகத்தானே இருக்கிறது!" என்றாள்.

"நன்றாக இருக்கிறதா! கண்களுக்குக் கீழே இந்தக் கறுப்பு, உலர்ந்த இந்தக் கன்னங்கள், இதெல்லாம் வீட்டு வேலை செய்வதனால் மட்டும் வந்த உடம்பில்லை. வேறு ஏதோ ஒரு காரணம் இருக்கிறது. என்னை ஏமாற்றி விடலாம் என்று நினைக்காதே, மன்னி! உண்மையை ஒளிக்காமல் சொல்லி விடு!"

அவள் சொல்வதன் தாத்பரியத்தைப் புரிந்துகொண்ட நிர்மலா சிரித்தாள். "இல்லையடி, அம்மா! இல்லை! நீ நினைக்கிற காரணம் இல்லை!" என்றாள்.

பிரபா ஆச்சரியத்துடன் அவளை ஒரு முறை பார்த்து

விட்டு, "உண்மையாகவா சொல்கிறாய்! உனக்குக் குழந்தை பிறக்கப் போகிறதில்லையா!" என்று ஸ்பஷ்டமாகவே கேட்டு விட்டாள்.

"இல்லை! நீ நினைத்தது தப்பு!" என்று சொல்லிச் சின்னக் குழந்தையை எடுத்து முத்தமிட்டுக் கொண்டான். பிறகு "இவர்களும் என் குழந்தைகள்தானே!" என்றான்.

"அது சரி, எதற்காக ஒன்றும் தெரியாதவள் போல் நடிக்கிறாய்! நான் உன் சொந்தக் குழந்தையைப் பற்றிக் கேட்கிறேன். உனக்குக் குழந்தை எப்பொழுது......"

உன் சொந்தக் குழந்தை! — பிரபா போன பிறகும் கூட அன்று முழுவதும் நிர்மலாவால் அந்த வார்த்தையை மறக்க முடியவில்லை. தினம் போல் அறையைப் பெருக்கிச் சுத்தம் செய்தாள். உலர்ந்த துணியை மடித்துக் கொடியில் போட்டாள். சின்னக் குழந்தைக்குப் பால் புகட்டித் தூங்கப் பண்ணினாள். பெண்ணைத் தலைவாரிப் பின்னிப் பார்க்குக்கு விளையாட அனுப்பினாள். ஆனால் பிரபா சொன்ன அந்த வார்த்தைகளை மட்டும் அவளால் மறக்கவே முடியவில்லை. இவ்வளவு நாட்கள் எப்படி அவள் அதை மறந்திருந்தாள்! அதுதான் அவளுக்கு ஆச்சரியமாயிருந்தது! எவ்வளவு அன்பாக நடந்து கொண்ட பொழுதிலும் இந்தக் குழந்தைகள் அவளுடைய சொந்தக் குழந்தைகள் ஆகிவிடுமா!




அவளுக்கு இவ்வளவு நாட்களுக்குப் பிறகு எல்லாவித இன்பங்களும் இருந்தும் ஏதோ ஒரு குறை உள்ளத்திலே புகுந்து உறுத்திக் கொண்டிருப்பது போலத் தோன்றியது. இந்தக் குழந்தைகளை அவள் எவ்வளவு நேசித்தாலும் தனக்குப் பிறந்த குழந்தைகளை நேசிப்பது போல் ஆகுமா? தன்னுடையது என்றால் தனி தானே?

இந்த வீட்டுக்கு வந்த பின்னர்தான் நிர்மலாவுக்குச் சகல பாக்கியங்களும் கிட்டின. நல்ல கணவன் கிடைத்தான். குடும்பப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள முடிந்தது. ஆனால் எங்கே என்ன குறை இருக்கிறதோ, தெரியவில்லையே! அலமாரியில் இருந்த மூன்று ஸெலுலாய்ட் பொம்மைகளின் மீது அவள் பார்வை விழுந்தது. அவள் சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு அங்கிருந்து நகர்ந்தாள்.

படுக்கையின் மீது விரிப்பைச் சரியாகப் போட்டுக் கொண்டே, "இன்று பிரபா வந்திருந்தாள்!" என்றாள் நிர்மலா.

"பிரபா வந்திருந்தாளா! என்ன சொன்னாள்!" என்று கேட்டான் ஹரிப்பிரஸாத்.

"என்ன சொல்லுவாள்! உன் முகம் ஏன் இப்படி உலர்ந்துபோய்க் கிடக்கிறது என்று கேட்டு ஒரு கதை கட்டி விட்டாள்."

"அவள் அப்படியா சொன்னாள்!" என்று கேட்டவாறே ஹரிப்பிரஸாத் அவள் அருகில் வந்து நின்றான். "அவளுக்குக் கண் இல்லை. கல்யாணம் ஆன பிறகு உன் முகத்தில் இன்னும் அழகு மெருகிட்டல்லவா இருக்கிறது!" என்றான்.

நிர்மலா விளக்கை அணைத்தாள். ஜன்னல் வழியே பாய்ந்துகொண்டிருந்த நிலவு இலேசாக படுக்கையில் விழுந்து கொண்டிருந்தது. "அழகு மெருகிட்டு இருக்கிறதென்று சொல்கிறீர்களே! பிரபா என்ன சொன்னாள், தெரியுமா!" என்று ஹரிப்பிரஸாதின் காதருகில் முகத்தைக் கொண்டு போய் ஏதோ முணுமுணுத்தாள் நிர்மலா.

"அப்படியா சமாசாரம்!" ஹரிப்பிரஸாத் சிரித்துக் கொண்டே, "சின்ன வயசிலேயே அவளுக்குக் கல்யாணம் ஆகி விட்டது. அவள் அதிகம் எழுதப் படிக்கத் தெரிந்தவளும் இல்லை. அவளுக்குக் கல்யாணம் என்றால் இந்த ஒரு அர்த்தத்தைத் தவிர வேறு ஒன்றும் தெரியாது. எங்களுக்குக் குழந்தையும் வேண்டாம், குட்டியும் வேண்டாம் என்று நீ சொல்லி விடக் கூடாதோ!" என்றான்.

"இதைச் சொல்வதென்றால் எனக்கு வெட்கமாயிராதா! போங்கோன்னு!" என்று நாணிக் கொண்டே கூறினாள் நிர்மலா.

பிறகு சிறிது நேரம் கழித்துக் குரலைத் தாழ்த்திக் கொண்டு, '' அது சரி, இப்பொழுது குழந்தை பிறக்க வில்லை என்றால் அதற்காக இனிமேல் பிறக்கவே பிறக்காது என்று சொல்லி விடமுடியுமா !'' என்று கேட்டான்.

ஹரிப்பிரஸாத் அவள் தலை மயிரைக் கோதிய வாறே, ''இருக்கும் இரண்டு குழந்தைகளையே சரிவரக் கவனிக்க முடியவில்லையே! இந்தக் குறைவான வருவாயில் இன்னும் வேறு குழந்தைகள் வேண்டுமா !'' என்றான்.

நிர்மலாவுக்கு ஒரு தடவை உடலைக் குலுக்கிப் போட்டது. அட! நிர்மலாவுக்கு என்ன வந்து விட்டது! ஹரிப்பிரஸாதின் அருகில் இருந்த அவள் விலகிப் படுக்கையின் ஒரு மூலையில் போய்ப் படுத்துக் கொள்ளுவானேன் ! '' அதற்காக எனக்கு ஒரு குழந்தை கூட இருக்கக் கூடாதா ! ஒன்று கூடவா இருக்கக் கூடாது !'' என்று வேறு பொருமத் தொடங்கிவிட்டாளே!

ஹரிப்பிரஸாதுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆகவே, வியப்புடன் அவளையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். ஒவ்வொரு குழந்தையையும் வளர்ப்பது, பெரியவர்களாக்கி விடுவது, உண்ண உணவு—உடுக்க உடை அளிப்பது, படிக்க வைப்பது எல்லாம் எவ்வளவு மாபெரும் பொறுப்பு என்பதை விமலா அறியவில்லை. அவள் அலட்சியமாக, அநுபவமற்றவளாக இருந்தாள். இதையெல்லாம் பற்றி அறிந்து கொள்ளவும் அவள் விரும்பவில்லை. அப்பொழுது ஹரிப் பிரஸாதுக்கும் முதல் கல்யாணம். வாலிபப் பருவம் வேறு. அவனும் முடிவைப்பற்றி அவ்வளவாகக் கவனம் செலுத்த வில்லை. அலட்சியமாக இருந்து விட்டான். அதன் பலனைத் தானே இப்பொழுது அநுபவித்துக் கொண்டிருந்தான் !

'' நிர்மலா, நீ விஷயம் தெரிந்தவள். உனக்கு எல்லாம் புரியும் என்று எண்ணியிருந்தேன். ஸியாமளா கைலாசம் இருவரும் உன் குழந்தைகள் தானே !'' என்றான்.

'' இல்லை, இல்லை, இல்லை !'' நிர்மலா கோபத்தில் குமுறிக் கொட்டி விட்டாள்.

அந்தக் குரலைக் கேட்டுக் குழந்தை கைலாசம் தூக்கத்திலிருந்து விழித்து அழத் தொடங்கி விட்டான். நிர்மலா அவனை மடியில் எடுத்து வைத்துக் கொண்டு, அழுகையை நிறுத்துவதற்காக அவன் வாயில் ரப்பரைக் கொடுத்தாள்.

அந்த இருட்டில் நிர்மலாவின் முகம் தெளிவற்றுத் தெரிந்து கொண்டிருந்தது. அதைக் கவனித்த ஹரிப்பிரஸாத் துணுக்குற்று, '' நிர்மலா, என்ன யோசிக்கிறாய் !'' என்றான்.

நிர்மலா அதற்குள் அடங்கி அமைதியாகி விட்டாள். சின்னக் குழந்தையைத் தூங்கப் பண்ணுவதற்காகத் தோளில் போட்டுத் தட்டியவாறே தாலாட்டுப் பாடிக் கொண்டு அறையில் இங்கும் அங்கும் உலாவலானாள். ஹரிப்பிரஸாதின் கேள்வியைக் கேட்ட அவள், '' ஒன்றுமில்லை- நர்ஸ் , நர்ஸாகவே இருக்க வேண்டியதுதானோ என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன் !'' என்றாள்.

ஹரிப்பிரஸாத் ஏதோ சொல்ல வாய் எடுத்தான். நிர்மலா உதட்டில் விரலை வைத்து, '' உஷ் ! பேசாதீர்கள்! குழந்தை விழித்துக் கொண்டு விடப் போகிறான் !'' என்றாள்.

**இலங்கைக் கடிதம்**

# பிடிவாதத்துக்கு மருந்து உண்டா?

**ரஜனி**

கொழும்பு, ஜூலை, 26உ

இவ்வாரம் இலங்கைப் பார்லிமெண்டில் இந்தியர் பிரச்னையைப் பற்றி மீண்டும் பிரஸ்தாபமேற்பட்டது. அப்பொழுது நாட்டிலேற்பட்டுள்ள அரசியல் நெருக்கடியை உத்தேசித்துப் பிரதம மந்திரியிடம் மனமாறுதலை அநேகர் எதிர்பார்த்தார்கள். பிரஜா உரிமைக்கு மனுக்கொடுக்கும் தவணைக் காலம் அடுத்த ஆகஸ்டு 5-ம் தேதியுடன் முடிவடைவதாலும் பல்லாயிரக் கணக்கான இந்தியர்கள் இன்னும் மனுக்கொடுக்காதபடியினாலும் தவணைத் தேதியை நீடிக்கப் பிரதமர் சம்மதிப்பாரென்று முக்கியமாக மிகுந்த ஆவலுடனும் அக்கறையுடனும் எதிர்பார்க்கப்பட்டது. சில தினங்களுக்கு முன்புதான் இலங்கை இந்திய காங்கிரஸ் தூது கோஷ்டி யொன்று உள்நாட்டு மந்திரி ஸர் ஆலிவர் குணதிலகாவைப் பேட்டி கண்டு பிரஜா உரிமை மனுக்களைப் பூர்த்தி செய்வதிலுள்ள கஷ்டங்களை எடுத்துச் சொல்லியது. மனுக் கொடுக்கும் தவணையை மேலும் இரண்டு வருட காலத்துக்கு ஒத்தி வைக்கவேண்டு மென்றும் கேட்டுக் கொண்டது. இதற்குப் பிரதம மந்திரி தமது பார்லிமெண்டுப் பிரசங்கத்தில் சாதகமாக பதிலளிப்பார் என்ற நம்பிக்கை பொதுவாக இருந்து வந்தது. துரதிர்ஷ்டவசமாக அந்த நம்பிக்கையைப் பிரதமர் சேனநாயகா குரூரமாகச் சிதைத்து விட்டார்.



மனைவி:—கறிகாய் வாங்கினேன். பதினைந்தே முக்காலணா சில்லறை இருந்தால் கொடுங்கோ......

கணவன்:—உன்னிடம் கொடுத்த ஒரு ரூபாய் நோட்டை மாற்றிக் கொள்ளேன்.

மனைவி:—வேண்டாம், அதை மாற்றினால் எல்லாம் செலவழிந்து விடும். நீங்கள் பதினைந்தே முக்காலணா சில்லறையாகவே கொடுத்து விடுங்கள்!

எதிர்க் கட்சித் தலைவர் டாக்டர் பெரைரா குறிப்பிட்டதைப் போல பிரதமரின் தொனியில் மாறுதலிருந்தது. இந்தியப் பிரதிநிதிகளின் பேச்சுகளையும் கோரிக்கைகளையும் துச்சமாக மதித்துப் பேசும் வழக்கமுடைய பிரதமர் அன்று மரியாதையுடனும் கண்ணியமாகவும் பேசினார். ஆனால் இனிப்பான பேச்சை இந்தியர் நாடவில்லை. இலங்கையர்களைப் போல தங்களையும் மனிதர்களாக, மனித உரிமைகளுடன் வாழ அனுமதிக்க வேண்டுமென்கிறார்கள். இதற்குப் பிரதமர் அளித்த பதிலென்ன! பழைய பல்லவியேதான்!

இலங்கையில் ஐந்து வருட காலம் வசித்த யாரும் இந் நாட்டில் நிரந்தரமாக வசிக்க விரும்புவதாக அறிவித்தால் அவர்களுக்குப் பிரஜா உரிமை யளிக்கப்படுமென்ற சலுகை சென்ற பதினாறு வருட காலமாக இருந்து வந்ததென்றும் இவ்வளவு காலமும் அந்தச் சலுகையைப் பயன்படுத்திக் கொள்ளாம லிருந்து விட்டு இப்பொழுது பிரஜாவுரிமை பெறப் போதிய அவகாசமளிக்கப்படவில்லை யென்று புகார் செய்யப்படுவதில் நியாய மில்லையென்றும் பிரதம மந்திரி கூறினார். இதன் பொருள் ஆகஸ்டு 5-ந் தேதி முடிவடையும் தவணைக் காலத்தை மேலும் நீடிக்க முடியாது. அந்தத் தேதிக்குப் பிறகு அனுப்பும் பிரஜா வுரிமை மனுக்களை அங்கீகரிக்கவும் முடியாது என்பதுதான். இதற்கு ஸ்ரீ எஸ். தொண்டமான் சுடச் சுடப் பதிலளித்தார். பிரதமர் கூறிய சலுகை இலங்கையில் தாற்காலிகமாக வசித்த இந்தியர்கள் நிரந்தரமாக வசிக்கப் போவதாய் அறிவித்துப் பிரஜாவுரிமை பெறுவதற்காகவே தவிர, தலைமுறை தலைமுறையாக இலங்கையிலேயே சாசுவதமாக வசித்து வரும் ஏழரை லட்சம் இந்தியத் தொழிலாளர்களுக்கு அல்ல. பழைய அறிக்கைகளைப் பிரதமர் புரட்டிப் பார்த்தால் அவர் கூற்று எவ்வளவு அபத்தமென்பது வெளியாகும். இந்தியர்களுக்கு இலங்கைப் பிரஜைகளாக பதினாறு வருட அவகாசம் கொடுத்ததாயும் அதை அவர்கள் பயன்படுத்திக் கொள்ள வில்லையென்றும் புகார் செய்வது அதர்மம் என்றார் ஸ்ரீ தொண்டமான்.

பிரதமர் இன்னொன்று சொன்னார். இந்தியாவின் பொருளாதார அபிவிருத்திக்குப் பிரிட்டிஷார் எவ்வளவோ பாடுபட்டிருக்கிறார்கள். அப்படியிருந்தும் இந்தியர்கள் "போ" என்றவுடன் பிரிட்டிஷார் கண்ணியமாக இந்தியாவை விட்டுப் போய் விட்டார்கள். இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பாடுபட்ட எங்களுக்கு இந்தியாவில் சில உரிமைகள் இருக்கவேண்டு மென்று அவர்கள் கோரியிருந்தால் இன்று இந்தியா ஒரு சுதந்திர தேசமாயிருக்க முடியாது. அதுபோல இலங்கை இந்தியர்களும் இந்நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்துக்குச் சேவை புரிந்ததற்காக இங்கு உரிமைகள் கேட்க நியாய மில்லை என்றார் பிரதமர் சேனநாயகா.

இதற்கும் ஸ்ரீ தொண்டமான் வெகு அழகாகப் பதில் சொன்னார். சுதந்திர மடைந்தவுடன் இந்தியர்களை விரட்டுவது போல பிரிட்டிஷாரை இந்தியா விரட்டவில்லை. பிரிட்டிஷ் ஆதிக்கத்தையே வெளியேறச் சொல்லியது. சுதந்திர இந்தியாவில் முதலாவது கவர்னர் ஜெனரலாக நியமிக்கப்பட்டவர் ஒரு பிரிட்டிஷ்காரர். இன்னமும் கடற்படை சேனாதிபதியா யிருப்பவர் பிரிட்டிஷ்காரர். பிரிட்டிஷாரை இந்தியா வெளியேறச் சொல்லியதாயும், சொல்லியவுடன் அவர்கள் கண்ணியமாக வெளியேறி விட்டார்களென்றும் கூறுவது அண்டைத் தேசத்தின் சரித்திர மறியாதவர் கூற்று! இதை ஸ்ரீ தொண்டமான் நாசுக்காக வேறு விதமாய்ச் சுட்டிக் காட்டினார். இந்தியாவில் என்ன நடந்தால் எங்களுக்கென்ன! எங்கள் பிரச்னைகளைத் தீர்க்க இந்தியாவில் நடப்பதை ஒரு அடிப்படையாகக் கொள்ளக் கூடாது. ஏனெனில் நாங்கள் இந்தியர்களுமில்லை; இந்தியாவுடன் எங்களுக்குச் சம்பந்தமுமில்லை. தலைமுறை தலைமுறையாக கண்டிய மாகாணங்களில் வசித்து வரும் நாங்கள் கண்டியத் தமிழர்களே தவிர எங்களை இந்தியத் தமிழர்கள் என்று அழைப்பது தவறு. இப்படி ஸ்ரீ தொண்டமான் அழகாகச் சொன்னார். என்ன சொல்லி யென்ன! வாதத்துக்கு மருந்துண்டு. பிடிவாதத்துக்கு மருந்தேது!

இந்தியத் தோட்டத் தொழிலாளர் ஜனத்தொகை பெருகிக்கொண்டே யிருக்கிறது. இப்பொழுதுள்ள இந்தியத் தொழிலாளர்களை இலங்கைப் பிரஜைகளாக அனுமதித்தால் வருங்காலத்தில் அவர்கள் தொகை எவ்வளவு பெருந் தொகையாகக் குட்டி போடும் என்று இன்னொரு காரணம் சொன்னார். அதற்கும் ஸ்ரீ தொண்டமான் பிரதமரைச் சும்மா விடவில்லை. அரசாங்க அறிக்கைகளி லிருந்தே பல புள்ளி விவரங்களை எடுத்துக் காட்டி இலங்கையின் இதர பாகங்களுடைய தோட்டங்களில் ஜனன விகிதம் குறைவாகவும் மரண விகிதம் அதிகமாகவும் இருப்பதை எடுத்துரைத்தார். சென்ற பத்து வருடங்களுக் கிடையில் தோட்டங்களில் இந்தியர் தொகையிலே 60,000 அதிகரிக்கிறது. இதன்படி வருடத்தில் 6000 அதிகமென்றாகிறது. ஏழரை லட்சம் இந்தியத் தொழிலாளர்களில் வருடம் 6000 அதிகரிப்பது ஒரு அதிகத் தொகையா! புள்ளி விவரங்களில் பித்தலாட்டம் ஏன்! என்று பிரதமரைக் கேட்டார் ஸ்ரீ தொண்டமான்.

என்ன சொல்லியும் தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று பிரதமர் சாதித்தபடியால் வரவு செலவு திட்டத்தின்மீது நடந்த ஓட்டெடுப்பில் இந்திய மெம்பர்கள் சர்க்காருக்குப் பாதகமாக எதிர்க் கட்சியுடன் சேர்ந்து ஓட்டளித்தார்கள். இந்திய மெம்பர்கள் சர்க்கார் கட்சியில் ஓட்டுக் கொடுப்பதேயில்லை யென்று அடிக்கடி புகார் கூறும் பிரதமர் தம்மை இந்திய அங்கத்தினர்களின் நிலைமையில் வைத்துக் கொண்டு வேறு எவ்விதம் நடந்து கொள்ள முடியுமென்று மனச்சாட்சியுடன் கூறட்டும்.

## பிரத்யட்ச சாட்சியங்கள்

பிரஜாவுரிமைச் சட்டத்தின் பிரகாரம் மனுக் கொடுக்க இந்தியர்களுக்கு இரண்டு வருட காலம் அவகாசம் கொடுக்கப்பட்ட பொழுதிலும் எட்டு லட்சம் இந்தியர்களின் சார்பாக அதிலும் கல்வியறிவில்லாத தோட்டக் காட்டு ஜனங்களின் சார்பாக ஒவ்வொருவரையும் தனியாக விசாரித்து மனுப் பத்திரங்களைப் பூர்த்தி செய்து அனுப்புவதென்பது லேசான காரியமில்லை. இந்த லட்சணத்தில் மனுப் பத்திரங்கள் வேண்டுமென்று கமிஷனருக்கு எழுதினால் மனுப் பத்திரம் வந்து சேர மாதக் கணக்கிலாகிறது. சில மாதிரி மனுப் பத்திரங்கள் கமிஷனரிடமே தீர்ந்து போய்விட்டன. இதற்கு யார் ஜவாப்தாரி! ஏழை இந்தியத் தொழிலாளர் சார்பாகத் தோட்ட சூப்பிரண்டெண்டுகள் எழுதினால் உடனுக்குடன் மனுப் பத்திரங்களை அனுப்பி வந்திருப்பதாக கமிஷனர் இப்பொழுது கூறுகிறார். அவர் கூறுவது உண்மையா! அல்லது மனுப் பத்திரங்கள் கைவசமில்லை யென்று கமிஷனர் எழுதுவதாகக் காங்கிரஸ் குற்றஞ் சாட்டுவது உண்மையா! இதைப் பொது ஜனங்கள் அனைவரும் அறிவதற்காக மனுப் பத்திரங்கள் கைவசமில்லை யென்று கமிஷனர் எழுதிய நூற்றுக் கணக்கான கடிதங்களைப் பார்லிமெண்டின் அடுத்த கூட்டத்தில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் சமர்ப்பிக்கத் தீர்மானித்திருக்கிறார்கள். யார் கூறுவது உண்மை யென்பதைக் கடிதங்கள் நிரூபிக்கும்.

இந்த இலங்கைக் கடிதம் பிரசுரமாகும் பொழுது பிரஜாவுரிமை பெற இந்தியர்களுக்கு அளிக்கப்பட்ட இரண்டு வருட காலமும் முற்றுப் பெற்றிருக்கும். இந்த இரண்டு வருடங்களுக்கிடையில் இங்கிருக்கும் எட்டு லட்சம் இந்தியர்களிலே சுமார் ஆறு ஆயிரத்துக்கும் குறைந்தவர்களுக்குத்தான் இலங்கை அரசாங்கம் பிரஜாவுரிமை வழங்கி யிருக்கிறது!



"பத்து லக்ஷ ரூபாய் இருப்பவன் திருப்தியாக இருப்பானா?"
"இருக்கமாட்டான்! பத்துக் குழந்தைகள் இருப்பவன்தான் திருப்தியாக இருப்பான்!"
"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?"
"போதும், இனிமேல் வேண்டாம் என்று அவன்தானே நினைப்பான்!"

# மனப் புயல்

வே. ரங்கராஜன்

"என்ன சொக்கலிங்கம்! உச்சி தாண்டிப் போச்சே, நீ கஞ்சி குடிக்கப் போகவில்லையா?" என்று கேட்டார் கண்ணங்குடி மிராசுதார் கனகசபைப் பிள்ளை.

"இல்லை எசமான், அந்திக்கு ஒரே மூட்டாப் போகிறேனுங்க!" என்று பதில் சொன்னபடியே சொக்கலிங்கம் நாற்று நடுவதில் ஈடுபட்டான்.

அவன் வாய் ஏதோ ஒரு ஏற்றப் பாட்டை முணு முணுத்துக் கொண்டிருக்க, செம்பகம் நெல் நாற்றுக்களுடன் அவன் பழகிய கைகள் விளையாடி வேரூன்றின. நாற்று நடுவதிலே அவனுக்கு ஒரு அலாதி ஆனந்தம். நாற்றங்காலுக்குக் கூப்பீடு தூரத்தில் இருந்த அந்த மூன் இலவமரம் இப்போது ஒரு ஆலமரத்தின் திருப்பணியைச் செய்து கொண்டிருந்தது. அதுவரை சொக்கலிங்கத்தின் கூடவே நாற்று நட்ட மற்ற நான்கு ஆட்களும் இரண்டு பெண்களும் அங்கே கஞ்சி குடித்துக் கொண்டிருந்தனர்.

தன் பண்ணையாள் சொக்கலிங்கத்தின் பதில் கனகசபைப் பிள்ளைக்குத் திருப்தியை உண்டு பண்ணவில்லை. "ஏன் சொக்கலிங்கம்! உன் பெண்சாதிக்கு உடம்புக்கு என்ன? வழக்கமாகக் கஞ்சி கொண்டு வருகிறவள் ஏன் வரவில்லை?" என்று மேலும் தொடர்ந்தார்.

"உடம்புக்கு ஒன்றுமில்லை, எசமான்! நன்றாகத்தான் இருக்கிறாள் ..." அவன் வார்த்தைகள் தொண்டைக்குள் சிக்கின.

கனகசபைப் பிள்ளை தன் பண்ணையாளின் மனப் புண்ணைக் குறிப்பாக உணர்ந்து கொண்டார். இருந்த போதிலும் அந்தப் பசி நேரத்தில் அவனது இருதயத்தின் ஆழத்தில் தேங்கியிருந்த துக்கத்தைக் கிளறி விட அவர் விரும்பவில்லை. ஆகவே, அவர் பரிவுடன், "சொக்கலிங்கம்! கழனியை விட்டு வரப்பேறிக் கொஞ்சம் களத்து மேட்டுக்கு வா!" என்றார்.

'இப்போது களத்து மேட்டில் என்ன காரியம்? என்னமோ தெரியவில்லையே!' என்ற எண்ணத்துடன் நாற்று நடுவதை நிறுத்தி வரப்பேறிய அவன் மடைவாயில் கைகால்களில் இருந்த சேற்றைக் கழுவிக் கொண்டான்.

கனகசபைப்பிள்ளை முன்னே போனார். சொக்கலிங்கம் பின்னே சென்றான்.

கனகசபைப் பிள்ளை தம் வாழ்விலே நாற்பத்தி ஒன்பதாவது மைல்கல்லைத் தாண்டி ஐம்பதிலே அடி எடுத்து வைத்து விட்டார். உலக அனுபவத்தின் அறிகுறியாக இளநரை அரும்பத் தொடங்கியது.

இந்த வயதிற்குள்ளே, பயிர், பச்சை, கன்று காலி இவைகளிடம் பழகிப் பழகி அவர் அவற்றின் பண்புகளை நிர்ணயித்து விட்டார். ஆனால் அதுவரை அவரது நிர்ணய எல்லைக்குள் அகப்படாத பொருள் ஒன்றே ஒன்று இருக்கத்தான் செய்தது. மின்னல் கொடியின் நெளிவு நிர்ணயமற்றது போல் பெண்களின் மனப்பண்பாடும் ஒரு எல்லைக்கு உட்படாதது என்பது அவர் கருத்து.

இந்தத் தீர்மானத்துக்கு அவர் வருவதற்கு அவருடைய சொந்த வாழ்க்கையேதான் காரணம். அவரால் தன் மனைவியின் மன இயல்பையே நிர்ணயிக்க முடியவில்லை. அப்படியிருக்கும் பொழுது மற்ற பெண்களைப் பற்றி எப்படி நிர்ணயிக்க முடியும்? அவர் மனைவி தன் தூர பந்துவின் வீட்டில் நடக்கும் கல்யாணத்துக்குப் போக வேண்டிய அவசியமில்லை.

சிலபுலன்களில் நாற்று நடவு நடக்கும்போது, போவது நல்லதல்ல என்பது கனகசபைப் பிள்ளையின் எண்ணம். தன்னுடைய வாழ்க்கைச் சகடத்தின் இடது சாரியாக வந்து கொண்டிருக்கும் மனைவியும் இதை ஆமோதிப்பாள் என்றே பிள்ளை எதிர்பார்த்தார். ஆனால் அந்த அம்மாள் அவர் பேச்சைக் கேட்கவில்லை. "இந்த நாற்று நடவும் அறுவடையும் ஜென்மத்திற்கும்தான் இருக்கிறது. இந்தச் சந்தர்ப்பம் விட்டால் மறுபடியும் பட்டணம் போய் உறவினரை எங்கே பார்க்கிறது?" என்று சொல்லிக் கண்ட சாமான்கள் கண்டபடி கிடக்கப் பட்டணத்துக்குக் கிளம்பியே விட்டாள்! அவளுடைய மனது கல்யாண சம்பிரமத்திலும், பட்டணத்தில் பார்க்க விருக்கும் விசித்திரங்களிலும் ஊன்றிப் போயிருந்தது.

களத்து மேட்டுக்கு வந்த கனகசபைப் பிள்ளை சுற்று முற்றும் ஒருதரம் பார்த்தார். சற்று முன் அவர் சாப்பிட்டு மூடி வைத்து விட்டுப் போன டிபன் கேரியர் கயிற்றுக் கட்டிலின் கீழே இருந்தது. ஆனால் மீதியிருக்கும் சோற்றையும் குழம்பையும் கொட்டிக் கிளறிப் போட ஏதேனும் பாத்திரம் வேணுமே! கனகசபைப் பிள்ளை ஒரு சிட்டிகை பொடியை எடுத்துப் போட்டுக் கொண்டே களத்து மேட்டைச் சுற்றி ஒரு தரம் பார்த்தார். பிறகு, "சொக்கலிங்கம்! அதோ வாய்க்கால் கரையோரம் இருக்கும் அந்தச்

சேனைச் செடியிலிருந்து நாலு இலை கிள்ளிக்கொண்டு வா!" என்று சொன்னார்.

பண்ணையார் அன்புடன் அழைத்து வந்த காரியம் இப்போது சொக்கலிங்கத்துக்குத் திட்டமாக விளங்கியது. அவருடைய அன்பு அவன் பசிக்கு ஒரு அமிர்த வர்ஷமாக இருந்ததில் வியப்பு என்ன?

*

சொக்கலிங்கத்தின் பசி அகன்றது. அதன் பிறகு அவன் மனம் எதையோ நாட, அவன் கைகள் தலைமீது இருந்த துணி முண்டை அவிழ்த்தன. நல்ல காலம், அவன் விழித்த முகம் நல்ல முகம் தான்! தலை முண்டின் ஒரு மூலையிலே வெற்றிலைச் சருகும் பாக்கும் முடியுண்டு கிடந்தன. அந்த வெற்றிலை முடியை அவிழ்த்து முன்னே வைத்துக் கொண்டு அவன் சற்று உட்கார்ந்தான்.

கனகசபைப் பிள்ளையும் ஒரு தம்பம் புட்டிச் சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டு கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்தார். பிள்ளை அவர்களின் மனம் சென்னை திருமண விழாவில் இருந்த தன் மனைவியை வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

அந்தச் சமயத்தில், "ஐயா! உங்களைத் தானே......!" என்று கூப்பிட்டு அவருடைய சிந்தனையைக் கலைத்தான் சொக்கலிங்கம். "என்னடா, சமாச்சாரம்?" என்று கேட்ட வண்ணம் கனகசபைப் பிள்ளை அவனைப் பார்த்தார்.

"எல்லாம் இருக்குதுங்க. நாலாவது கொஞ்சம் இருந்தால்......" என்று வினயத்துடன் கேட்டான். சற்றும் முகம் கோணாமல், கட்டிலின் தலைமாட்டிலே இருந்த பித்தளை வெற்றிலைப் பெட்டியை எடுத்து, ஒரு துண்டுப் புகையிலையைக் கிள்ளிக் கொடுத்தார் பிள்ளை.

அப்போது பிற்பகல் இரண்டு மணி இருக்கும். முன் இலவ மரம் அளித்த சொற்ப நிழலிலே மற்ற பண்ணையாட்கள் படுத்து இளைப்பாறிக் கொண்டிருந்தனர்.

வானத்திலும் அவ்வப்போது மந்தாரம் தட்டும் மேக ராசிகள் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. ஆகவே, வெய்யில் அவ்வளவு உக்கிரமாக இல்லை.

தன் மனைவியின் பிடிவாதத்தை நினைத்துக் கொண்ட பண்ணையாருக்கு இடைவேளை கதை சித்திரை வரவில்லை. பேச்சைத் தொடர்ந்தார்.

"சொக்கலிங்கம்! உன் பெண்டாட்டி எங்கே? அவளுக்கு ஏண்டா இந்தக் கோணல் புத்தியெல்லாம்?" என்று பரிவுடன் கேட்டார்.

சொக்கலிங்கத்தின் குடும்ப வாழ்க்கையில் அவருக்கு ஒரு அக்கறை இருந்தது. அது அவராக ஏற்றி வைத்த விளக்கு. கடந்த இருபது வருஷங்களாக அவரது பண்ணையில் நிலைத்து நிற்பவன் அவன் ஒருவன்தான்.

புகையிலை எச்சிலைக் கீழே உமிழ்ந்த சொக்கலிங்கம், "ஐயா! ஒரு புருஷனுக்குத் தன் பெண்டாட்டி மேலே ஆசை இல்லாமல் இருக்குமா? என்ன இருந்தாலும் பெற்ற தாய் ஒருத்தி இருந்தால் அவளை என்ன செய்கிறது? என் ஆத்தா வாசனை கொஞ்சங் கூடக் கூடாது என்கிறாள். அந்தக் கிழத்தை நான் என்ன செய்கிறது? அவளுக்குத் தூரத்துப் பார்வையோ மங்கிப் போச்சு! தலை ஆட்டம் கொடுத்துப் போச்சு. அப்படி இருக்கிற ஆத்தாளை நான் எப்படி ஒதுக்கித் தள்ளுவது? கடவுளுக்குத்தான் அது ஒப்புமா? அந்தக் கிழவியின் காற்றுக்கூட வீட்டிலே வீசக் கூடாது என்கிறாள். நான் என்ன செய்யட்டும், சொல்லுங்கள்" என்றான்.

அதுவரை எங்கோ கவனமாய் இருந்த பிள்ளை தன் உணர்விற்கு வந்தார். பிறகு, "அது எப்படிடா முடியும்? கிழவி உன்னை விட்டால் வேறே எங்கேடா போவாள்? நீ அவளுக்கு ஒரே மகன்தானே! ஏன் இந்தக் குட்டிக்கு இப்படி......?" என்று அனுதாபம் காட்டினார்.

சொக்கலிங்கம் மேலும் தொடர்ந்தான்: "வள்ளியம்மை உங்களுக்குப் புதியவள் அல்ல. அவள் சித்தாடை கட்டிக்கிட்டுச் சுற்றின நாளிலிருந்து நான் கல்யாணம் கட்டிக் கொண்ட நாள் வரைக்கும் அவளைப் பார்த்துத்தான் இருக்கிறீங்க. இருந்தாலும் அவள்குணம் இப்பொழுது ரொம்ப



ரொம்ப மாறிப் போச்சுங்க. அதுவும் சின்னதும் சிறிசுமாக நாலைந்து குழந்தை குட்டிகளைப் பெற்ற பிறகு அவன் புத்தி பேதலிச்சே போச்சுங்க. எல்லாம் என் கெட்ட காலத்தின் கூறுங்க! அவன் அப்பனும் ஆத்தாளும் சேரிக் குடிசையைப் பிரித்துக் கொண்டு சிதம்பரம் முனிசிபாலிடி வேலைக்குப் போன நாளாக இவளுக்கும் என் வீட்டிலே தரிக்க ஓடவில்லை. பிறந்த வீட்டுக்குப் போய் வந்து கொண்டிருந்தவள் இப்போது ஒரேயடியாக..."

"இந்தச் சேதி எனக்குத் தெரியாதே! அவ்வளவு தூரத்துக்குக் கூட..." என்று கேட்டவாறு கனகசபைப் பிள்ளை ஆச்சரியத்துடன் சொக்கலிங்கத்தைப் பார்த்தார்.

"போனால் போகிறான், புத்தி கெட்ட கழுதை. அப்படித்தான் போனானே! சிதம்பரத்திலே போய் அல்லி ராணியைப் போல அரசாளவா போயிருக்கிறான்? முனிசிபாலிடியிலே குப்பை அள்ளிக் கொட்டுகிற வேலைக்குப் போயிருக்கிறான்! மாசம் பிறந்தால் சம்பளமாம்! ஆறுமாசத்துக்கு ஒரு விசை துணி மணி கொடுக்கிறார்களாம்! தனியாகக் குடிசை கட்டிக் கொள்ள இடம் கொடுத்திருக்கிறார்களாம்!..."

"ராம, ராமா! இந்த வள்ளியம்மைக்குப் புத்தி ஏண்டா இப்படிப் போச்சு? அவன் புத்தி இது மாதிரி மாறிப்போகும் என்று நான் கனவில் கூட நினைக்க வில்லையே! பண்ணையிலே இருந்து பயிர் பண்ணுகிற பயலுக அந்த வேலைக்கெல்லாம் இருக்காடா, சொக்கு? முனிசிபாலிடி குப்பை அள்ளுகிற வேலை பண்ணைப் பள்ளக் குடும்பம் செய்கிற காரியமா?" கனகசபைப் பிள்ளை மனம் நொந்து சொன்னார். சொக்கலிங்கத்தின் இருதயத்தின் ஆழத்திலும் அந்த உணர்ச்சி ஊடுருவியது.

"எல்லாம் சகவாச தோஷமுங்க! அவன் ஆத்தாள் பேச்சைக் கேட்டுக் கொண்டு அவன் அப்பன் பண்ணை வேலையை விட்டு முனிசிபாலிடி வேலைக்குப் போனான். அப்பனும் ஆத்தாளும் சேர்ந்து இப்பொழுது மகளையும் கெடுத்து விட்டார்கள். இந்தக் கூத்திலே என்னையும் அவர்கள் வழிக்கு மெல்ல மெல்லத் திருப்பணும் என்று பார்க்கிறார்கள். விட்டேன், இரண்டு பாட்டு! அவள் அதுதான் சாக்கு என்று கிளம்பி ஆத்தாள் வீட்டுக்குப் போய்விட்டாள். அப்பொழுது போனவள்தான் இப்படி...என்னமோ போங்க! என் மனசு ஒடிஞ்சு போச்சுங்க...அந்தக் குழந்தைகளை நினைச்சால்......" என்று சொல்லித் தன் கண்களில் துளித்த நீரைச் சுண்டி யெறிந்தான் சொக்கலிங்கம்.

மனைவி குழந்தைகளின் மீதிருந்த அந்த ரங்கப் பாசத்திற்கும், அவன் இரத்தத்துடன் ஊறிவிட்ட பண்ணைக் கடமை உணர்ச்சிக்கும் இடையே ஊசலாடிய அவனது நிலை பரிதாபமாக இருந்தது.

"ஊம்ம்..." என்று ஒரு நீண்ட பெருமூச்சு விட்ட கனகசபைப் பிள்ளை, கைச் சுருட்டை விசிறித் தூர எறிந்துவிட்டு வெற்றிலைப் பெட்டியை எடுத்தார். தன்னுடைய பண்ணையாளும் ஏறக் குறைய தன்னுடைய நிலைமையில்தான் இருக்கிறான் என்பது அன்றுதான் அவருக்குத் தெரிந்தது. தன்னுடைய குடும்பச் சிக்கலுக்குப் பரிகாரம் தேடுவது சிரமமாக அவருக்குத் தோன்றியது. ஆனால் தன் பண்ணையாள் சொக்கலிங்கத்தின் குடும்பச் சிக்கலைத் தீர்த்து வைக்க வழிதுறைகள் இருப்பதாகவே தோன்றியது. ஆகவே, "அப்படி விட்டுவிடக் கூடாது, சொக்கு! தாயும்தான் வேணும். தாரமும்தான் வேணும். மனசு முறிந்து போனால் பின்னால் சேர்வது ரொம்பக் கஷ்டம். அந்தப் பிள்ளையார் மூலைத் துண்டும் கடவு நட்ட பின் நீயே போய் வள்ளியைக் கூட்டி வந்துவிடு" என்றார்.

ஆனால் சொக்கலிங்கத்திற்கு அது நடக்கக் கூடிய காரியமாகப் படவில்லை.



களத்து மேட்டிலே நீண்ட நேரம் மௌனம் நிலவியது. சொக்கலிங்கம் மரகதம் போல் பசந்து கிடந்த நாற்றங்காலையே பார்த்துக் கொண்டிருந்தான். 'இந்த நாற்றங்காலைப் போல் தன் வாழ்வு மீண்டும் பசுமை அடையுமா!' என்று அவன் மனம் அங்கலாய்த்தது.

அந்தச் சமயத்திலே தூரத்தில் தபால்காரப் பொன்னுசாமி 'தபால் பட்டுவாடா' செய்வதற்காகக் கிராமத்துச் சாலை வழியே போய்க் கொண்டிருந்தான். அவன் பிள்ளையைப் பார்த்ததும் களத்து மேட்டை நெருங்கவரவே, சொக்கலிங்கத்தின் மனம் இல்லாத எண்ணங்கள் எல்லாம் எண்ணிக் குழப்பியது.

ஆனால் அங்கே வந்த பொன்னுசாமி சொக்கலிங்கத்தை விட்டுத் தாண்டிப் போய் கனகசபைப் பிள்ளையிடம் ஒரு கவரைக் கொடுத்துவிட்டுச் சென்றான்.

கனகசபைப் பிள்ளை கவரை இப்படியும் அப்படியும் ஒருதரம் திருப்பிப் பார்த்தார். பிறகு கவரின் வலது விளிம்பைக் கை நகங்களால் கிள்ளி எறிந்துவிட்டுக் கடிதத்தை வெளியே எடுத்தார்.

முத்துச் சரம் கோர்த்தாற்போல் பேசும் தமிழில் தொடங்கிய அந்தக் கடிதம், அவர் முழு கவனத்தையும் கவர்ந்தது. அதைப் படித்து முடித்ததும் அவர் உடல் முழுதும் வியர்த்துக் கொட்டியது. அவர் ஒரு ஆழ்ந்த பெருமூச்சு விட்டார்.

தன்னுடைய பட படப்பு ஒருவாறு விலகிய நிலையிலே சொக்கலிங்கம் பண்ணையாரின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். எஜமானரின் முகத்திலே தோன்றிய திடீர் மாறுதல் அவன் நெஞ்சிலே ஒரு கனிவை உண்டாக்கியது. "என்னுங்க, எசமான்......!" என்று கேட்டான்.

கனகசபைப் பிள்ளை அவன் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை.

★

கனகசபைப் பிள்ளை மீண்டும் ஒருதரம் அந்தக் கடிதத்தைப் படித்தார். அவரையும் மீறி ஒரு ஆழ்ந்த பெருமூச்சு வெளியேறியது. இதைக் கண்ட சொக்கலிங்கம் மீண்டும் ஒரு முறை, "என்னங்க சேதி?" என்று கேட்டான்.

"என்ன சேதியைச் சொல்லுவது, சொக்கலிங்கம்! ரொம்பக் கெட்ட சேதி வந்திருக்கிறது. கல்யாண வீட்டிலே களவு போய்விட்டதாம். களவு போன சாமான்களில் நம் வீட்டுக்காரியின் டிரங்குப் பெட்டியும் ஒன்றாம். இவள் நகைகள், பட்டுப் புடவைகள், பணம் எல்லாம் பெட்டியில்தான் இருந்தனவாம்! நான் தடுத்ததையும் மீறி அவள் போனதற்குக் கடவுள் சரியான தண்டனையை அவளுக்குக் கொடுத்துவிட்டாராம்! என் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொள்ள நாளைக்கே புறப்பட்டு வருகிறாளாம்! எப்படி இருக்கிறது சேதி?"

அந்தத் துக்கச் செய்தியைக் கேட்ட சொக்கலிங்கம் ஸ்தம்பித்து நின்றான். களவு போன பொருள்களை எண்ணும்போது அவனுக்கு வாயடைத்து விட்டது.

சொக்கலிங்கம் இந்தப் பிரமையிலிருந்து மீள்வதற்குள் மற்றொரு அதிசயம் அவன் கண் முன் தோன்றியது. இது நிஜமா? அல்லது வெறும் உருவெளித் தோற்றமா? சொக்கலிங்கம் தன் கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டு மறுபடியும் பார்த்தான். சந்தேகமில்லை. சண்டையிட்டுக் கொண்டு ஓடிப்போன அந்த வள்ளியம்மைதான் வாய்க்கால் வரப்புகளைக் கடந்து களத்து மேட்டை நோக்கி வந்து கொண்டிருந்தாள்! "இதோ வள்ளியம்மை வருகிறாளே!" என்று உணர்ச்சி பொங்க உளறிக் கொட்டினான் சொக்கலிங்கம். கனகசபைப் பிள்ளை தூரத்தில்வரும் வள்ளியம்மையைப் பார்த்ததும் ஒரு ஆழ்ந்த பெருமூச்சு விட்டார். பிறகு, "ஆமாம், அவள் ஏண்டா வெறுங் கையோடு வருகிறாள்? கைக்குழந்தை எங்கே?" என்று கேட்டார்.

சொக்கலிங்கத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஆமாம்! அவளை எப்போதும் கைவிடாமல் இருக்கும் இரண்டு வயது ஆண் குழந்தை எங்கே? தன் படபடப்பிலே மெய் கலங்கிக் கண்ணீர் பெருக மலைத்து நின்றான் சொக்கலிங்கம்.

அதற்குள் களத்து மேட்டிலே அடி எடுத்து வைத்த வள்ளியம்மை வேரறுபட்ட மரம்போல் தரைமீது விழுந்து தன் கணவனின் கால்களைப் பிடித்துக் கொண்டாள். "உங்கள் பேச்சைக் கேட்காமல் பட்டண வாசத்துக்குப் போனேன். உங்களுடைய பேச்சைக் கேட்காத குற்றத்துக்காக என் பிள்ளையைப் பலி கொடுக்கும்படி ஆகிவிட்டது. மானம் போக, மனம் நைய முனிசிபாலிடிக் குப்பை வாரிக் கொட்டினதுதான் மிச்சம். என்னைக் கை விட்டு விடாதிர்கள், அத்தான்!" என்று விம்மி விம்மி அழுதாள் வள்ளியம்மை.

வயல் வெளியிலே விளையும் தானியம் குவியும் அந்தக் களத்து மேட்டிலே, சொக்கலிங்கத்தின் உள்ளமும் வள்ளியம்மையின் உள்ளமும் மீண்டும் ஒன்று கூடின. அதற்குச் சாட்சியாக அவர்கள் குடும்ப விளக்கை முதலில் ஏற்றி வைத்த பண்ணையார் கனகசபைப் பிள்ளையே அங்கு நின்றார். "கல்யாணக் கூடம் செய்யாததைக் களத்துமேடு செய்யும்!" என்று அவர் பாட்டி சொல்லும் வாய்மொழி அப்போது அவருக்கு நினைவு வந்தது.



பாவம் அந்தப் பெண்
மலேரியாவினால் என்ன
கஷ்டப்படுகிறாள்

'பாலுட்ரின்'
அந்தத் தொல்லையினின்றும்
என்னைப் பாதுகாத்துவருகிறது

எலும்பையே நொறுக்குவது போன்ற தினசரி குடும்ப வேலைகளுக்கு மேல் மலேரியா வேறு. பாவம் அந்தப் பெண் மெலிந்து வெறும் நிழல்போல ஆகிவிட்டாள். அந்த சாதுப்பெண் அதைப்பற்றி என்னதான் செய்கிறாளோ கடவுளுக்குத்தான் தெரியும். எப்போது பார்த்தாலும் அவள் நோய், நோய், நோய் என்று நோயினால் நொறுங்குகிறதைத்தான் நாங்கள் காண்கிறோம். ஆனால் தினமும் ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை வீதம் சாப்பிட்டு வந்தால் மூன்று அல்லது நான்கு நாட்களுக்குள் அவள் சுலபமாக குணமடையலாம். அவளது உதாரணம் என்னை உஷார்ப்படுத்திவிட்டது. ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் சாப்பாட்டுக்குப் பிறகு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை சாப்பிடுவதை நான் வழக்கமாக ஆக்கிக் கொண்டுவிட்டேன். என் குடும்பத்திலே மற்றவர்களும் இதைப் பின்பற்றுமாறு செய்து வருகிறேன். ஆகையினால் மலேரியா எனது வாசற்படிகளை அணுகுவது இல்லை.






**பாலுட்ரின்***
டிரேட் மார்க்

மலேரியாவுக்கு ஓர் அற்புதமான மருந்து

அணுவுக்கு ஒரு வில்லை

இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்

IX-P 139 TM

பல வருஷங்கள் அவதி யுற்றாள்; பிறகு

# முகப் பருக்கள் மறைந்தன

**க்ருஷெனின் உட்புற சிகிச்சையால்**





அநேகவிதமான சரும வியாதிகளை, உட்புறச் சிகிச்சையினால் பூரணமாகக் குணப்படுத்த முடியும். ஸ்ரீமதி ப்ரேம்நாத் இவ்வுண்மையைக் கண்டு பிடிப்பதற்கு முன் 23 வருஷங்கள் கஷ்டப்பட்டாள். மிகுந்த நன்றியறிதலுடன், கீழ்க்கண்ட கடிதத்தை எழுதி யுள்ளார்.

**“எனது முகம் முழுதும் சிறு சிறு வெண்புள்ளிகளால் (பருக்களால்) 23 வருஷங்கள் சிரமமுற்றேன். அடிக்கடி வைத்தியம் செய்து கொண்டும், பருக்கள் முகமெங்கும் வியாபித்ததே தவிர யாதொரு குணமும் காணப்படவில்லை. விதவிதமான பூச்சு மருந்துகளும் பலனளிக்கவில்லை. எல்லோரும் “உன் முகத்தில் இருக்கும் பருக்கள் என்ன?” என்று அடிக்கடி கேட்பதால் அவர்களது மத்தியில் நின்று பேசவே பயமாயிருந்தது. க்ருஷெனைப் பற்றி நிறையப் படித்திருந்ததனால் அதையும் உபயோகித்துப் பார்க்கத் தீர்மானித்தேன். தற்சமயம் மூன்று மாத உபயோகத்திற்குப் பின் நிச்சயமாகவே எனது முகத்தில் யாதொரு புள்ளிகளும் தென்படவில்லை என்று சந்தோஷத்தோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன். உட்புறச் சிகிச்சை வேண்டுமென்று எனக்கு இதுவரை யாரும் தெரிவிக்கவில்லை. இதற்கு மேல் என்னால் வந்தனம் தெரிவிக்க இயலவில்லை.”**

உடலின் உட்புறத்து, மந்தமான அவயவங்களால் வெளித்தள்ள முடியாத விஷப் பொருள்களான இரத்தத்தின் அசுத்தப் பொருள்களே சகல சருமக் கோளாறுகளுக்கும் காரணம். உட்புற சுத்தத்தை நிரந்தரமாக வைப்பதற்கு “க்ருஷேன” இயற்கையின் ஒரு சிறந்த சாதனம். உடலிலுள்ள ஈரல், மூத்திரக் காய்கள், குடல்கள் இவை சரிவர வேலை செய்து ரத்தத்திலுள்ள அசுத்தங்கள் சரிவர வெளியே தள்ளப்படுவதற்கு “க்ருஷனி”லுள்ள ஆறுவித லோக தாதுக்கள் பெரிதும் உதவுகின்றன.




எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

K8ID. 13

## மூல நோய் சம்ஹார

# நித்திப்பு லேகியம்

மூல நோயே எல்லா நோய்களுக்கும் மூலகாரணம். எவ்வித மூல நோயாயினும் அவற்றை அறவே ஒழிக்கும் சக்தி மேற்கூறிய எமது நித்திப்பு லேகியத்திற்கு உண்டு. ராத்தல் ஒன்றுக்கு விலை ரூபாய் ஆறு மட்டும். வியாதி இரத்த மூலமாயிருப்பின் விவரம் தெரிவிக்கவும்.

*N.B.*—தீராத நோய் என்று தள்ளி விடும் அநேகம் நோய்களும் "அகஸ்தியர்" மருத்துவத்தின் பெருமையால் தீருமென அறியவும். எந்த நோயாயினும் எத்தகைய பழக்கமுடையதாயினும் தீர்க்கலாம். விவரங்களுக்கு விரிவாக எழுதவும்.

**தபால் செலவு பிரத்தியேகம்**

**ஏஜண்டுகளும் தேவை**

**THE AGASTYA MANDIRAM**
**SIDDHA VYDYASALA**
**SAMADHI THOPPU, MANAKKAD**
**TRIVANDRUM**

---

## உங்களுக்குச் சோர்வும் அயர்ச்சியும் தோன்றுகிறதா?

**மருந்து போர்ட் அங்கீகரித்துள்ள இந்த ஔஷதம் உங்களுக்குப் புதிய சக்தியைத் திரும்பத் தரும்.**

பைல் பீன்ஸ் உங்களுக்கு அளிக்கக் கூடிய பூரண சந்தோஷத்தையும் புதிய வாழ்வையும் அனுபவியுங்கள். மருந்து போர்ட் அங்கீகரித்துள்ள பைல் பீன்ஸ் உட்கொள்ளுங்கள். நீங்கள் முன்னைவிட ஆரோக்கியமாய் வாழ்வீர்கள். உங்கள் வலுவையும் சக்தியையும் அபகரிக்கும் அசுத்தங்களை பைல் பீன்ஸ் போக்குகிறது. உங்கள் ரத்தத்தைச் சுத்தம் செய்து பைல் பீன்ஸ் உடலை ஒழுங்குபடுத்துகிறது. பைல் பீன்ஸ் உங்கள் சரீரத்துக்கு உறுதியுண்டாக்குகிறது. எனவே அஜீர்ணம் உண்டாகுமே, அழகு குறைந்து விடுமே என்கிற பயம் ஏதுமின்றி நீங்கள் விரும்பியதைச் சாப்பிடலாம்.




மலச்சிக்கல், வயிற்று வலி, பித்தம், தலைவலி, மதமதப்பு, அஜீர்ணம் இன்னும் மற்ற சாதாரண நோய்களுக்கெல்லாம் பைல் பீன்ஸ் உலகப் பிரசித்திபெற்ற நிவாரணியாக விளங்குகிறது.

படுக்கைக்குப் போகுமுன் இரவும் பைல் பீன்ஸ் உட்கொள்ளத் துவங்குங்கள். எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

BFY: 8

---

# அநுபவத்தால் வந்த ஞானம்

நூற்றாண்டுக் கணக்கின் அநுபவத்தின் பிறகு கூட சந்தன மரம் பயிரிடும் சரியான முறை மைசூர் சமஸ்தானத்தாரால் மட்டும் மிக ரகசியமாகக் கையாளப்பட்டு வருகிறது. பயிராகும் இடத்திலேயே துண்டிக்கப்பட்டுப் பாதுகாக்கப் படுகின்ற மரங்களிலிருந்து மைசூர் அரசாங்கத் தொழிலாளர்களால் இறக்கப்படுகின்ற நறுமணம் வாய்ந்த சந்தனத் தைலம்தான் உலகத்திலேயே தூய்மையானது. அதுவே இயற்கையான மணமுடையது — அந்த மணம் உலகம் எங்கும் உண்டாக்கப்படுகின்ற உயர்ந்த சோப்புகளுக்கும் வாசனைத் திரவியங்களுக்கும் பயன்படுகின்றது.

# மைசூர் சந்தனத் தைலம்

**அரசாங்கச் சந்தனத் தைலத் தொழிற்சாலை - மைசூர்**






நளினி கிப்ஸ் டென்டிபிரிஸை விரும்புகிறாள். அவள் சிறுவயதிலிருந்தே அதை உபயோகித்து வருகிறாள்.



காலையிலும் மாலையிலும் எல்லா பற்களையும் கிப்ஸினால் தேய்க்கிறாள். மேலும் கீழுமாக, ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கமாக அல்ல.



அவள் பற்கள் பிரகாசமாகவும் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன. அது கிப்ஸ் டென்டிபிரிஸினால் தான்!

## நீங்களும் கிப்ஸ் உபயோகிக்கிறீர்களா?

சாம்பல், கரி, இவைபோன்ற இதர கரகரப்பான பல்துலக்கும் வஸ்துக்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் ஹானி விளைவிக்கக்கூடும். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் டென்டிபிரிஸ் பற்களுக்கோ அல்லது ஈறுகளின் மிருதுவான பாகங்களுக்கோ ஒருபொழுதும் கெடுதல் செய்வதில்லை. கிப்ஸ் நீங்கள் எப்பொழுதும் ஒழுங்கான பற்களைப்பெற உதவுகிறது; வாய்க்கும் சுவாசத்திற்கும் புது மணத்தை அளிக்கின்றது. மேலும் அதன் 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகளில் எதை தேர்ந்தெடுத்தாலும் உபயோகிக்க மிகவும் சௌகரியமாயிருக்கும்.




# கிப்ஸ் டென்டிபிரிஸ்

ஒழுங்கானமுறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது

விலையோ சொற்பம்—பலநாட்கள் நீடித்துவரும்

GD. 30-172 TM

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladans Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

# காது மந்தமா?

நன்கு கேட்டு அனுபவிக்க

"மெய்கோ"

கேட்கும் சாதனமே

சிறந்தது

●

விலை மற்றும் இதர விவரங்களுக்கும்
ஆங்கிலத்தில் எழுதவும்

**Modern Radio Co.,**

KHALEELI MANSIONS, (K)
35, MOUNT ROAD, MADRAS-2

---

கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின்
பெருமையையும் அவர் இந்தியாவுக்கு
ஆற்றி யிருக்கும் அருந் தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் அழகாக விளக்கி யிருக்கிறார்

விலை அணா எட்டு

( தபால் செலவு தனி )

●

சசிதேவி எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

( தபால் செலவு தனி )

●

கிடைக்குமிடம் :

"கல்கி" காரியாலயம்

கீழ்ப்பாக்கம் :: சென்னை



Regd. No. M. 4392



# ஒரு நாளைக்கு ஒவ்வொருவருக்கும் 2 அவுன்ஸ் கொழுப்பு தேவை

ஒரு நாள் ஒரு சாதாரண மனிதனுக்கு அல்லது ஸ்திரீக்கு தேவையாக கொழுப்பு 2 அவுன்ஸ். *சமநிலை உணவிற்கு* இன்றியமையாதவையான ஐந்துவகை சத்துக்களில் கொழுப்பு ஒன்று. உடல் நலத்திற்கும், சக்திக்கும் இந்த ஐந்துவகை சத்துக்கள் யாவும் மிகவும் அவசியம். இவைகளை கீழ்வருமாறு தொகுக்கலாம்; (*விடமின்கள்*) பழங்கள், காய்கறிகள் (சமைக்காதவை சிலாக்கியம்), ஈரல்; (*தாதுப்பொருள்கள்*) பால், முட்டை, பாலாடை, மீன், கோதுமை, பசலைக்கீரை; (*புரதசத்துக்கள்*) பால், முட்டை, மாமிசம், கொட்டைகள், பருப்புவகைகள், மீன், கோதுமை; (*மாவுசத்துப்பொருள்கள்*) அரிசி உள்பட எல்லாவித தானியங்கள், உருளைக்கிழங்கு, வாழைப்பழம்; (*கொழுப்புகள்*) கொட்டைகள், ஆட்டி எடுத்த எண்ணெய்கள், கொழுப்புள்ள மாமிசம், மீன், சமையலுக்குதவும் சுத்தமான சிறந்த கொழுப்புகளில் ஒன்றான டால்டா. இது ஊட்டமளிப்பதும் ஆரோக்கியமானதும் கூட. எல்லாவித சமையல்களுக்கும் இது உகந்தது. சீல்செய்த டின்களில் விற்கப்படுவதால் இது எப்பொழுதும் புதிதாகவும் துப்புரவாகவும் உங்களுக்குக்கிடைக்கிறது.




ரேஷனில் கிடைக்கும் தானியங்களை நீடித்திருக்கச் செய்வதெப்படி?

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது என்று வேண்டுமானாலும்— எழுதுங்கள்!

## டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

HVM. 164-172 TM